# S.F.



# திரையுலகில் ஒரு புதிய சகாப்தம்

மூக்கு!

விபத்தில் இறந்துவிட்ட சர்வாதிகாரியின் சிதைந்த உடம்பில் உருப்படியாக மிஞ்சி யிருந்த உறுப்பு மூக்கு மட்டுந்தான். ஆனல் கவலையில்லை. அந்த மூக்கை வைத்துக் கொண்டே செத்துப்போன சர்வாதிகாரியை அதே அச்சில் திரும்பவும் உருவாக்கிவிட லாம். கி. பி. 2173ல் மருத்துவ விஞ்ஞானம் அடைந்திருக்கிற வளர்ச்சி இது! நியாயப் படி இந்தச் சாதனையைச் செய்து முடிப்பதற் காக வரவேண்டிய நிபுணருக்குப் பதில் நகைச் சுவை நடிகர் உடி ஆலன் உள்ளே புகுந்து விடுகிறர். பிறகென்ன? படம் முழுவதுமே விழுந்து விழுந்து சிரிக்க வைக்கிற காட்சிகள் தான்!

அண்மையில் சென்னை - அமெரிக்க கலா சாரக் கேந்திரம் ஏற்பாடு செய்த விஞ் ஞான கற்பனைத் திரைப்பட விழாவில் இடம்பெற்ற ஏழு படங்களுள் உடி ஆலனின் ஸ்லீப்பரும் ஒன்று.

விஞ்ஞானமும் தொழில் நுட்பமும் நாளுக்கு நாள் அபரிமிதமான வளர்ச்சி யடைந்து வரும் நிலைமை மனித மனத்தில் மிரட்சியையே உண்டு பண்ணுகிறது. நாள டைவில் விஞ்ஞானமும் தொழில் நுட்பமும் நம்மை அடக்கி ஆள்கிற அளவுக்கு ஆதிக்கம் செலுத்தத் தொடங்கி விடும் என்கிற நமது நியாயமான அச்ச உணர்வுதான் விஞ் ஞானக் கற்பனைப் படங்களின் வெற்றிக்கு அடிப்படைக் காரணம். ஜார்ஜ் லூகாஸின் 'டி எச் எக்ஸ் 1138' என்ற படம் இந்த அச்ச உணர்வைப் பூரணமாகப் பயன் படுத்திக்கொண்டு பீதியூட்டும் வருங்கால உலகை நம் கண் முன் சித்திரிக்கிறது. பூமிக்கு அடியில் கம்ப்யூட்டர்களின் கட்டுப் பாட்டில் மனிதர்கள் வெறும் இயந்திரங் களாக வாழ்கிருர்கள். ஆணும் பெண்ணும் இணைவது கூட கம்ப்யூட்டர்கள் வகுத்து வைத்திருக்கிற நிகழ்ச்சி நிரலின்படித்தான் நடக்கிறது. பரஸ்பர அன்பின் அடிப்படை யில் ஆணும் பெண்ணும் இணைவது விரும் பத் தகாத, தண்டனைக்குரிய வக்கிர உணர் வாகக் கருதப்படுகிறது. இப்படிப்பட்ட அமைப்பிலிருந்து ஒருவன் தப்பித்துக்கொள் வதைச் சித்திரிக்கிறது படம். முழுக்க முழுக்க அவனது சொந்த முயற்சியால் தப்பினுன் என்று சொல்ல முடியாது. தப்பிச் செல் பவனைப் பிடிப்பதற்கு கம்ப்யூட்டர்கள் ஒதுக்கி வைத்திருக்கிற தொகை தீர்ந்ததும்

அவனைப் பிடிக்கும் முயற்சி கைவிடப்படுகிறது. அவ்வளவுதான்!

அணுக் கதிர் வீச்சால் தாவரங்களும் விலங்கினங்களும் அற்றுப் போய்விட்ட உலகை 'ஸைலண்ட் ரன்னிங்' விவரிக்கிறது. தாவர, விலங்கின மாதிரிகள் பூமிக்கும் மேலே விண்வெளிக் கலங்களில் பாதுகாக்கப்படுகின்றன — பரிசோதனைகளுக்காக! அவற்றையும் அழித்துவிட பூமியில் இருக்கும் 'கண்ட்ரோல்' உத்தரவிடுகிறது. ஆனால் அவற்றைப் பராமரித்து வரும் தாவர இயல் நிபுணர் அவற்றின் மீதுள்ள பரிவின் காரணமாக உத்தரவுக்குக் கட்டுப்பட மறுத்து விடுகிறார்.

'ஸார்டாஸ்' திரைப்படம் மனிதர்கள் பிரம்மாண்டமான குடுவைக்குள் வாழ்வதைச் சித்திரிக்கிறது. இந்தக் குடுவை பூமியிலேயே உருவாக்கப்பட்டிருக்கிறது. அதற்கு வெளியிலும் மனிதர்கள் வாழ்கிறார்கள். அவர்கள் ஒருவரையொருவர் அடித்துக் கொல்லும் காட்டுமிராண்டிகள். உள்ளே இருப்பவர்கள் மரணத்தை வென்றுவிட்ட 'கந்தர்வர்கள்'! கடைசியில் மரணமே விமோசனம் என்று இந்தக் 'கந்தர்வர்'களும் உணரத் தலைப்படுகிறார்கள். இயற்கைக்கே இறுதி வெற்றி. 'ஜேம்ஸ் பாண்ட்' புகழ் ஸீன் கானரி நடித்த இந்தப் படம் இங்கே இருக்கிற சென்சாரின் கைகளைப் பிசைய வைப்பது.

இங்கே ஏற்கனவே வாரக் கணக்கில் ஓடிய ஸ்டேன்லி குப்ரிக்கின் '2001: ஏ ஸ்பேஸ் ஆடிஸ்ஸி', ஸ்டீவன் ஸ்பீல்பர்க்கின் 'குளோஸ் என்கவுண்டர்ஸ் ஆஃப் த தேர்ட் கைண்ட்' ஆகியவை விழாவில் இடம் பெற்ற மேலும் இரு படங்கள். விஞ்ஞானமும் தொழில் நுட்பமும் அடைந்து வரும் வளர்ச்சி பற்றிப் பயமுறுத்தாத படங்கள். திரைப்படத் துறையில் சாத்தியமாகியுள்ள பிரமிக்கத்தக்க தொழில் நுட்பத் தேர்ச்சியைக் கண்டுகொள்ள உதவும் படங்கள். உன்னதமான கலைப் படைப்புகள்.

ஸ்பேஸ் ஆடிஸ்ஸியில் நமக்கு அறிமுகமாகும் எச்.ஏ.எல்—9000 என்ற கம்ப்யூட்டர் மனிதனின் உற்ற சகாவாகவே இருக்கிறது. மனிதனைக் காட்டிலும் அதிகமாக மனித உணர்வுகளை வெளிப்படுத்துகிற கம்ப்யூட்டர் அது!

வேறு கிரகங்களைச் சேர்ந்தவர்கள் பூமிக்குப் படையெடுத்து வந்து தாக்குதல் நடத்தும் முந்தைய கற்பனைகளுக்கு மாறாக வேறு உலகத்தவர்கள் நம்முடன் தொடர்பு வேண்டி நல்லெண்ணத் தூதுக் கோஷ்டியினராய் வருவதாகச் சித்திரிக்கும் 'குளோஸ் என்கவுண்டர்ஸ்', இந்த வித்தியாசம் காரணமாகவே முக்கியத்துவம் பெறுகிறது.

அப்பட்டமான செக்ஸ் புளித்துப்போய், 'ஸ்பை த்ரில்லர்'களில் அலுப்புத் தட்டி, 'பார்க்க வேண்டியதெல்லாம் பார்த்தாகி விட்டது — புதிதாக இன்னும் என்ன இருக்கிறது' என்ற பசியைத் தீர்க்க விஞ்ஞானக் கற்பனைப் படங்களின் சகாப்தம் தொடங்கியிருக்கிறது. விஞ்ஞானம், தொழில் நுட்பம் ஆகியவற்றின் அபரிமிதமான வளர்ச்சி பற்றி எடுத்துக் கூறி, ரசிக்கவும் வியக்கவும் வைப்பதுடன் நிதானம் பிழைப்பதால் ஏற்படக் கூடிய விபரீதங்களை எடுத்துக் காட்டி எச்சரிக்கவும் செய்கிறது.

**-மலர்மன்னன்**

---

பஸிபிக் மா கடலினூடே சொர்க்கமென எண்ணத்தக்க இயற்கை எழில் கொஞ்சும் தீவு.

பால் நியூமன்: பெட்ரோலியம் எண்ணெய்க் கிணறுகள் எங்கெல்லாம் இருக்கும் என்று 'வேவு' பார்க்க உலகைச் சுற்றிவரும் ஆசாமி. அவரிடம் இத்தீவில் சிக்குகிற ஓரிடம் அவரையே சிக்கலில் மாட்டி வைக்கிறது.

வில்லியம் ஹோல்டன்: சங்கிலித் தொடரான பல ஹோட்டல்களின் முதலாளி. இத்




தீவிலும் உல்லாசப் பயணிகளுக்கு ஐந்து நட்சத்திர ஆடம்பர ஓட்டல் நடத்தும் பெரும் பணக்காரர்.

ஜாக்குலின் பிஸ்ஸெட்: உடலாலும் மனத்தாலும் பலசாலிகளான மேற்சொன்ன இருவரிடையே யாரைத் தேர்ந்தெடுப்பது என்பது புரியாமல் மனம் தத்தளிக்கத் தவிக்கும் கவர்ச்சிக் கன்னி.

இந்த மும்முனைப் போராட்டத்தினூடே நாலாவதாக ஒன்று: அடங்கிக் கிடக்கும் ஓர் எரிமலை திடீரென்று வெடித்து ஆக்ரோஷத்துடன் நெருப்பாகச் சீறுகிறது.

தீவின் நிரந்தரவாசிகள் ஒருபுறம், உல்லாசப் பயணிகள் ஒரு புறம். எல்லாரையும் எரிமலையின் ஆவேசத் தாக்குதலிலிருந்து எப்படித் தப்புவிப்பது? எத்தனை பேரை எரிமலைக்குக் காவு கொடுப்பது? அந்த நெருக்கடி நிலையில் மக்கள் எப்படியெல்லாம் நடந்துகொள்வார்கள்?

ரோமாஞ்சனம் உண்டாக்கும் கிளைமாக்ஸ் காட்சி மட்டுமின்றி, படம் முழுவதுமே ஹவாய்த் தீவுகளின் ஒரு கடற்கரைப் பிரதேசத்தில் எடுக்கப்பட்டதுதான். இங்கே மெய்யாலுமே இயற்கை எழிலுடன் எரிமலைகளும் உண்டு. அவற்றை நன்கு பயன்படுத்திக் கொண்ட படம்: WHEN TIME RAN OUT

**த.மு.ரா.**

## லக்மே அறிமுகப்படைப்பு: பரதநாட்டின் முதன்முதல்:
## புரதச்சத்துக் கண்டிஷனர் அடங்கிய ஷாம்பூ.




அழகுத் தூய்மையளிக்கும்,
உமது கூந்தலின் குறைதிருத்தும்
பளபள புதுவனக் கட்டமைப்
பண்படுத்தும்.

ப்யூட்டி & எக்
60 மிலி & 120 மிலி

# Lakmé

மயிரிழைகளைத் தாக்கித் துவண்டு போக வைக்கும் சாதா ஷாம்பூக்கள் இனி எதற்கு ? உமது கூந்தலைப் பண்படுத்த இதோ விஞ்ஞான முறைப்படி வளமூட்டிய லக்மே விசேஷ ஷாம்பூ.



வாடி மொடித்த மயிரிழைக்கு உயிரூட்டும் புரதச் சத்து, லக்மே ஷாம்பூவிலுள்ள கண்டிஷனர். இது மயிரிழைகளின் குறை திருத்துகிறது.

**சரிவிகிதப் பொருத்த முடைய அதன் உள்ள மைப்பு கேச நலம்**



**ஓங்கவைத்திடும் :**
ஷாம்பூவின் காரப்பங்கும் அமிலப் பங்கும் சரிக்குச்சரி பொருந்தியிருப் பது (pH சரிவிகிதநிலை) ஒரு சிறப்பாகும்.



**இயல்பான சரிவிகித குணநிறைவு பெற்ற ஷாம்பூ:**
சாதா ஷாம்பூக்கள் பெரும்பாலும் காரகுணம் மிகுந்தவை. ஆதலால் மயிரிழை பிளந்து வாடிவிடும். மாறாக அதிக காரம், அதிக அமிலம் இல்லாத நல்லுசித நிலையில் உள்ளது லக்மே ஷாம்பூ. எனவே கூந்தலுக்கு அதிக வலிமை, நெகிழ்வுத்தன்மை...சிக்கல் விழாக சீர்மை, நீடித்த நறுமணம். இனியும் உமக்கேன் சிகைக் சேதம்? உபயோகிப்பீர் வேளைதவறாமல் லக்மே ஷாம்பூ.

daCunha/L-Sham./127/T.

# ஸதாத்

‘‘பிரச்னைகளை விவாதித்துத் தீர்வு காணப் பொறுமை இன்றி துப்பாக்கி முனையில் தீர்ப்பதற்கே உலகம் அதிக ஆர்வம் காட்டுவதானது இன்றைய மனித குலத்தின் சோகக் கதை.’’ —பிரதமர் இந்திரா காந்தி

டாக்கா, வாடிகேன், வாஷிங்டன், டெஹ்ரான்... இப்போது கெய்ரோ.

அமைதிக் காவலர் அன்வர் ஸதாத்தின் மரணம் அநாகரிகமான ஒரு மகிழ்ச்சி ஆரவாரத்தை டெஹ்ரான், ட்ரிபோலி போன்ற நகரங்களிலும் பாலஸ்தீன விடுதலை இயக்கத் தலைவர்களிடமும் தோற்றுவித்திருக்கிறது. அருவருக்கத் தக்க இந்தச் சிரிப்பே அன்வர் ஸதாத்தின் அமைதிப் பணி அடைந்து வந்துள்ள மகத்தான வெற்றிக்கு எடுத்துக்காட்டு.

அமைதிக் காவலர் என்பதால் ஸதாத் தொடை நடுங்கியல்ல. இஸ்ரேலிடம் எகிப்து இழந்திருந்த நிலப்பரப்பின் ஒரு பகுதியை மின்னல் தாக்குதல் நடத்தித் திரும்பப் பெற்ற தீரர் அவர். ஆனால் போர் துவக்க எவ்வளவு துடிப்பாய் இருந்தாரோ அதே ஆர்வத்தைப் போர் நிறுத்தத்திலும் காண்பித்து இஸ்ரேல் வசம் பாக்கியிருந்த எகிப்திய நிலப்பரப்பைப் பேச்சு வார்த்தைகள் மூலமாகப் படிப்படியாகத் திரும்பப் பெறத் திட்டமிட்டு அதிலேயும் மாபெரும் வெற்றி கண்டார். அடுத்த ஏப்ரலில் எஞ்சியுள்ள கடைசி ஒரு பகுதியும் எகிப்துடன் இணையும் என்ற கட்டத்தில் இன்று அவர் சதிச் செயலுக்கு இலக்காகி மடிந்தது எகிப்துக்கு மட்டுமல்ல, உலகுக்கே துரதிர்ஷ்டம்தான்.

மத்திய கிழக்கில் போர் மேகங்கள் விலகி அமைதி சூரியன் பிரகாசிக்க முக்கிய காரணமாய் இருந்த ஸதாத் இதையொட்டி இஸ்ரேலுடன் நேசப் பான்மையை வளர்த்துக் கொண்டார். எதிரி நாடாயிற்றே என்று யோசியாமல் வரட்டுக் கௌரவம் பாராமல் இஸ்ரேலுக்குத் தாமே விஜயம் செய்தார். அத்தேசத் தலைவர்களுடன் சமாதானப் பேச்சு வார்த்தை நடத்தினார்.

இது இதர அரபு நாட்டவருக்கும் பாலஸ்தீன விடுதலை இயக்கத்தினருக்கும் பிடிக்காமல் போக அவர்கள் அவரை வெறுத்து ஒதுக்கத் தலைப்பட்டனர். இந்த வெறுப்பின் ஒரு வடிவமே ஸதாத் மீது வீசப்பட்டு அவரது உயிரைக் குடித்த கைக்குண்டு. இப்படி ஸதாத்தின் நல்லெண்ணமே ஒரு சாராரிடம் வெறுப்பை வளர்த்தாலும் மறுபுறம், அவர், அகில உலகமும் வாழ்த்த, அமைதிப் பணிக்கான நோபெல் பரிசை 1978ல் இஸ்ரேலியப் பிரதமர் பெகினுடன் பகிர்ந்துகொண்டார்.

அமைதி கருதியே அவர் சில அம்சங்களில் கடுமை காட்ட நேர்ந்தது. நாஸரின் கொள்கைகள் பலவற்றை அவர் தைரியமாகப் பயனற்றவை என ஒதுக்கித் தள்ளினார். இதற்கு உள்நாட்டில் ஏற்பட்ட எதிர்ப்புக்களைக் கண்டிப்புடன் ஒடுக்கினார். ருஷ்ய ராணுவ ஆலோசகர்களை மூட்டை கட்டி அனுப்பினார். அமெரிக்கா சென்று கார்ட்டரின் ஆதரவுடன் காம்ப் டேவிட்டில் இஸ்ரேலியத் தலைவர் பெகினுடன் பேச்சு வார்த்தைகள் நடத்தினார். வரட்டு சோஷலிஸத்தைத் தம் தேசத்திலிருந்து விரட்டியடித்து, சுதந்திரப் பொருளாதாரம் செழிக்க வழி வகுத்தார்.

‘‘ஸதாத்தின் கொள்கைகளையே தொடர்ந்து பின்பற்றுவேன்’’ என்று சொல்லியிருக்கிறார் அவருக்குப் பின் பதவிக்கு வந்துள்ள முபாரக். வாழ்த்துகிறோம்.

அமைதிக்காகவே பாடுபட்டு அமைதிக்காகவே உயிரை விட்ட ஸதாத்துக்கு உலகம் செய்யக்கூடிய பிரதியுபகாரம் மத்திய கிழக்கில் தொடர்ந்து அமைதி நிலவச் செய்வதுதான்.

இதில் இஸ்ரேல், எகிப்து, அமெரிக்கா, ருஷ்யா, பாலஸ்தீன விடுதலை இயக்கத் தலைமை, மற்ற அரபு நாடுகள் ஆகிய அனைத்துக்குமே பங்கும் பொறுப்பும் உண்டு. குறிப்பாக இஸ்ரேலியத் தலைவர்களின் மனம் ஸதாத்தின் மரணத்தால் நெகிழுமானால் — அவர்கள் பிடிவாதம் சற்றுத் தளருமானால் — ஸதாத் மரணத்திலும் ஒரு சாதனை புரிந்தவராகச் சரித்திர ஏடுகளில் இடம் பெறுவார்.




கல்கி

1981 அக்டோபர் 18

துன்மதி ஐப்பசி 2

மலர்: 40 இதழ்: 12





தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# அதிசயமான ஓர் அக்டோபர் இரண்டு!

இன்னும் ஒரு காந்தி ஜெயந்தி வந்து போயிற்று. காலையில் அ.இ.ரே.யில் ரகுபதி ராகவ பஜனை; பகலில் காந்தி சமாதியில் மலர் வளையங்கள்; மாலையில் ராஷ்டிரபதி முதல் கலெக்டர் வரை பலரது சொற் பொழிவுகள். தீர்ந்தது நம் கடமை. மறு தினத்திலிருந்து மறுபடி லஞ்சலாவண்யங்கள்; பொய்ப் பிரசாரங்கள்; கள்ள மார்க்கெட் வியாபாரங்கள், பறிக்கப்படும் சுதந்திரங்கள். மறுநாளைக்குப் போவானேன், ஜெயந்தி தினத்தன்றே குதிரைப் பந்தயமும், சாராயக் கடைகளும் சக்கைப் போடு போடவில்லையா?

ருத்ராட்சப் பூனைகளே அதிகமுள்ள இத் தகைய சூழ்நிலையில் மெய்யான காந்திய சிந்தனையில் அக்டோபர் 2ம் தேதியன்று சில மணி நேரம் கழிந்தது என்றால் பாரத நாட்டிலேயே விரல் விட்டு எண்ணிவிடக் கூடிய சில இடங்களில்தான் அது நடந் திருக்க முடியும். அத்தகைய பாக்கியம் பெற்றது சென்னை ராஜேஸ்வரி கல்யாண மண்டபம். இங்கே ஆண்டுதோறும் வள்ள லார் – காந்தி விழாவை எட்டு நாளைக்கு நடத்துகிறார் பொள்ளாச்சி நா. மகாலிங்கம். இந்த அக்டோபர் இரண்டில் அங்கே பேசப்பட்ட ஏராளமான சீரிய கருத்துக் களில் சில:

**குமரி அனந்தன்:**

அரசியலில் ஒருவன் உயர வேண்டும் என் றால் அவன் உயரம் தாண்டுகிற விளையாட்டு வீரனைப் போல் நடந்து கொள்ள வேண்டும். உயரம் தாண்டுகிறவன் கோட்டும் சூட்டும் அணிந்தா வருவான்? ஒவ்வொன்றாகக் களைந்துவிட்டு அரை நிஜாருடன் மட்டும் லவா தாண்டும் பயிற்சி பெற்று வெற்றி குவிப்பான்? அதைப் போல அரசியலில் உயரம் தாண்ட நினைப்பவனும் ஆசைகளை ஒவ்வொன்றாய்க் களைய வேண்டும். பரிசுத்த மான உள்ளத்துடன் உயரே செல்ல வேண் டும். உயரே உயரே போனாலும் அவன் அடித்தளத்தை மறக்கவே கூடாது. திரும்பத் திரும்ப அதனிடத்தே வரவேண்டும்.

அண்ணலின் பிறந்த தினத்தில் உயிர் பிரிந்தவர் காமராஜ். அவர் எளிய குடும்பத் தில் பிறந்து கொஞ்சம் கொஞ்சமாக, உயர்ந்து உயர்ந்து வந்தார். காந்திஜியோ மிக உயர்ந்த நிலையிலிருந்து பட்டம், பதவி, தொழில், செல்வம் அனைத்தையும் படிப் படியாகத் துறந்து கீழிறங்கி சாமானியரை உய்விக்க வந்தார். இவர் மேலே மேலே போக அவர் கீழே கீழே இறங்கி வர ஒரு கட்டத்தில் இருவரும் இணை சேர்ந்தனர்.

இப்போதுதான் திரு கிருஷ்ணசாமி ரெட்டி யார் என்னுடன் பேசிக் கொண்டிருந்தார். காமராஜ் முதல்வராக இருந்தபோது இவர் அரசாங்க வக்கீலாகப் பணியாற்றியவர். பிறகு நீதிபதியாகவும் உயர்ந்தவர். "காம ராஜ் நீதித் துறையில் குறுக்கிட்டதே கிடை யாது" என்றார். "நீங்கள் நீதிபதியாக இருந்தபோதா?" என்று கேட்டேன். "அப் போது மட்டுமல்ல. அதற்கு முன் அரசாங்க வக்கீலாக நான் இருந்தபோதும் கூடத்தான்" என்றார்.

சட்டத்தை அதன் போக்கில் செயல் பட விட்டவர் காமராஜ்.

**கிரிதாரி பிரசாத்:**

ஹரிஜன மதத்துக்கு காந்திஜி அளித்த சுருக்க மான விளக்கம்: 'அஹிம்சா மார்க்கத்தில் சத்தியத்தைத் தேடல்'

"கிராமப் புனருத்தாரணம் என்றால் என்ன? நாங்கள் என்ன செய்ய வேண்டும்?" என்று தொண்டர்கள் கேட்டபோது அண் ணல் சொன்னார்: "நான் ஒரு கிராமத் துக்குப் போகும்போது, அவர்கள் 'ஐயா! எங்களுக்குக் கல்வி தேவை' என்பார்களே யானால் கல்வி போதிக்கத் தகுதி பெற்றவர் களை அழைத்து வந்து உதவச் சொல்வேன். 'ஐயா, எங்களுக்குத் தொழில் தேவை' என்று கேட்பார்களேயானால் அவர்களுக்கு நெசவும் நூற்பும் கற்றுத் தர உரியவர்களை அழைத்து வருவேன். 'ஐயா! எமக்குச் சுகா தாரம் தெரியவில்லை' என்பார்களேயானால் தோட்டி வேலை செய்ய நானே புறப்பட்டு விடுவேன்!"

**நா. மகாலிங்கம்:**

செல்வந்தர்களுக்குக் காந்திஜி விதித்த தர்மகர்த்தா முறையை நம்மைவிடவும் பிற'



○ வானதி பதிப்பகம், சென்னை-17 வெளியிட்ட "வாழ்விக்க வந்த மகாத்மா" என்ற நூல் வெளியீடு பெற்றது. நூலாசிரியர் எஸ். டி. சம்பந்தத்தைக் கௌரவிக்கிறார் நா. மகாலிங்கம்



○ கிருஷ்ணசாமி ரெட்டியார்



○ குமரி அனந்தன்

# நாடும் நடப்பும்

✖ டாக்டர் ரெக்ஸ்

✖ சுகாதார அமைச்சரே தூக்கிக் கொண்டாலும் மருந்து என்றால் குழந்தைகளுக்குப் பயம்தான்! செஞ்சிலுவைச் சங்கம் போலியோ தடுப்பு மருந்து கொடுக்கிறபோது.

சென்னை நகர ஷெரீப் டாக்டர் ரெக்ஸ், பொருளாதாரத்தில் மிகவும் பின்தங்கியுள்ள இருபத்தைந்து உடல் ஊனமுற்ற ஜோடிகளுக்குத் திருமணம் செய்து வைக்கப் போகிறார். இம்மாதக் கடைசி வாரத்தில் முதல்வர் எம்.ஜி. ஆர். முன்னிலையில் சென்னையில் இந்தக் கோஷ்டித் திருமணங்கள் நடைபெறும். "எனது சொந்தச் செலவில் நான் நடத்தப்போகும் இத்திருமணங்களுக்கு ஒரே நிபந்தனை. பொருளாதாரத்தில் ரொம்பவும் பின்தங்கியவர்கள் என்பதற்கு அவர்கள் தொகுதி எம். எல். ஏ. அல்லது எம். பி. அத்தாட்சி வழங்க வேண்டும். என்பதுதான்" எனக் கூறும் ரெக்ஸ், திருமணத்துக்காக ஒவ்வொரு ஜோடிக்கும் ரூ. 500 பணமும் மாப்பிள்ளைக்கு வேட்டி சட்டை, பெண்ணுக்குப் புடவை ரவிக்கை, தங்கத் தாலி ஆகியவையும் தருகிறார். உறவினர்களுக்குச் சாப்பாடு, நாதஸ்வரக் கச்சேரி எல்லாம் உண்டு. "இதனிடையே ஊனமுற்றோர்களுக்காகச் சிறப்பாகப் பாடுபடும் ஒருவரைக் கவுரவிக்கவும்போகிறோம்" என்று சொல்லும் திரு ரெக்ஸ், சேரிகளில் வசிக்கும் ஏழை மக்கள் வீடுகளுக்குச் சென்று இலவசமாக மருத்துவம் செய்கிறார். சென்னை ஷெரீப் பதவியை வகிக்கும் முதல் டாக்டர், முதல் கிறிஸ்துவர் இவர்தான். —சிக்கி

● செஞ்சிலுவைச் சங்கம் என்றால் நமக்கு உடனே நினைவு வருவது போர்க்களமும், அங்கே காயமுற்றோருக்கு முதலுதவியும் தான். ஆனால் அமைதிக் காலத்தில் அது வாளா இருப்பதில்லை. இந்திய செஞ்சிலுவை சங்கத்தின் தமிழ்நாட்டுக் கிளை, சென்னை மாண்டியத் சாலையில் உள்ள சொந்தக் கட்டிடத்தில் டர்னர் தொழில் பயிற்சி, தையற் கலை, அச்சகத் துறைப் பயிற்சி இத்தனையும் உடல் ஊனமுற்றோருக்காக, தேர்ந்த நபர்களை வைத்து அளிக்கிறது. வசதியற்ற, ஊனமுற்ற குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கும் 'காலிபர்' செய்து பொருத்துகிறது. முப்பது குழந்தைகளுக்கு மேல் ஒன்றாகச் சேரும் இடத்தில் டாக்டர்களை அனுப்பி அவர்கள் மூலம் போலியோ மருந்துச் சொட்டுகளைக் குழந்தைகளுக்கு வழங்குகிறது. தற்போது இக்கிளையின் உறுப்பினர்கள் தீவிரமாக ஈடுபட்டிருக்கும் முக்கிய சமூகப் பணி:

ஊனமுற்ற குழந்தைகளைப் பகல் நேரத்தில் வைத்துப் பாதுகாக்கவும், அவர்களுக்குக் கல்வி போதிக்கவும், தொழிற் பயிற்சியோடு மறுவாழ்வு அளிக்கவும் ஒரு விடுதி — டே கேர் சென்டர் — அமைப்பதுதான். இதற்கு நிதி திரட்டும் வகையில், சென்னை மியூசிக் அகாடமி அரங்கில் இம்மாதம் 30 ஆம் தேதி கலை நிகழ்ச்சிகள் பல நடத்தத் திட்டமிட்டிருக்கிறார்கள். ரஜனிகாந்த் மேடையில் தோன்றச் சம்மதித்திருக்கிறார். இந்தப் பகல் நேர விடுதி ஒரு பகல் கனவு அல்ல என்று நிரூபிக்கச் சென்னை வாசிகள் உற்சாகத்துடன் முன் வந்து உதவவேண்டும் என்று அமைப்பாளர்கள் வேண்டுகோள் விடுத்திருக்கின்றனர்.

- சாருகேசி, தமயந்தி

---

டிஷார் புரிந்து கொண்டிருக்கிறார்கள்! அங்கே எஃகு ஆலைகள் அரசுடைமை ஆக்கப்பட்டபோது நிர்வாகம் மாற்றப்படவில்லை. இதுவரை தனியார் துறை நிர்வாகிகளாய் இருந்தவர்களையே தொடர்ந்து அரசு சார்பில் பணியாற்றுமாறு அரசு கேட்டுக் கொண்டது. ஆனால் இங்கு பாங்குகளும் இன்ஷியூரன்ஸும் அரசுடைமையானபோது அதுவரை இருந்த நிர்வாகிகளை அனுப்பிவிட்டு அரசு அதிகாரிகள் பொறுப்பேற்றார்கள். இதனால் தேர்ந்த நிர்வாக அனுபவ ஆற்றலை இவை இழந்துவிட்டு நிற்கின்றன.

காந்திஜியிடம் "இங்கு விவசாயம் நவீனமாக்கப்பட வேண்டும், டிராக்டர்களைப் பயன்படுத்த வேண்டும்" என்று யாரோ சொன்னபோது அவர் பதிலளித்தார்: "எத்தனை டிராக்டர்கள் தேவை என்று மதிப்பிடுங்கள். அவற்றுக்கு அயல் நாட்டிலிருந்து தருவிக்க வேண்டிய பெட்ரோலியம் எண்ணெய் எவ்வளவு கணக்கிடுங்கள்; அந்நியச் செலாவணி எவ்வளவு வேண்டும் யோசியுங்கள்."

அவர் கூறியதை நாம் கேட்கவில்லை. டிராக்டர் மட்டுமென்ன, ரயில்வே; மற்றும் மின் நிலையங்கள், ஆலைகளின் கொதிகலன்கள் எல்லாவற்றையும் நிலக்கரியை ஒதுக்கி பெட்ரோலியம் பயன்படுத்துவதாக மாற்றினோம். இன்று பெட்ரோலியம் விலை உயர்வால் மிக அதிகமாகப் பாதிக்கப்பட்டிருப்பது நாம்தான்!

தொகுப்பு : குட்டிகிருஷ்ணன்

# வேலைக்குப் போகும் பெண்

நடிப்பு:
டணால் தங்கவேலு

கதை:
சாருகேசி, தமயந்தி

சித்திரம்:
செல்லம்

போட்டோ:





















அது வந்து.... அத்தே.... வந்து.... கபாலி....
வந்தாவது போயாவது! அமிர்தம், நீ எந்த நம்பருக்கு போன் பண்ணினியோ? சரியா நம்பர் சுத்தறதுல ராங் நம்பர் கிடைக்குது இப்பல்லாம்.


ஆமா அத்தே, இன்னிக்கும் பூரா நான் ஆபிஸ்ல என் வீட்டுல-தான் இருந்தேன். போன் எதுவும் வரல்லியே!
என்னம்மா! வர வழியில அந்த டிவி கடையிலருந்து இவரை விசாரிச்சுக்கிட்டு வாங்கன்னு சொல்லத்தான் கூப்பிட்டேன்.
எனக்குத் தெரியுமடா! நானே விசாரிச்சுப் புட்டேன்! இன்ஸ்டால்மெண்ட்டுல வாங்கிடலாம். இன்னொரு மூத்தக் கண்ணுக்குட்டியை தானா தட்டி எடுத்து வச்சாங்க!


டிவி பெட்டிக்குள்ளேருந்து குச்சியோ கம்பியோ தெறிச்சு வெளியே விழுந்தது?
ஏம்பா அப்படிக் கேக்கறீங்க? அப்படி வந்தா என்ன பண்றதுன்னு "எதிரொலி"க்கு எழுதிக் கேக்கலாம். இங்க பேரைப் படிச்சுப் பாருங்க!


அதுக்கில்லேடா, மிஷினிலேருந்து உப்பு வெடிச்சதுக்கு சுட்டி கட்டுடான்னு இங்க அம்மா அதை தூர ஒதுக்கி வச்சுட்டாங்க! இதுல அப்படி வராதென்னு கேட்டேன்.
ஐயையோ, உங்களுக்கு ஒண்ணும் ஆகலியே அத்தை?


அது இருக்கட்டும் ஒருமுறை இன்னும் எங்கியோ மயிலாப்பூர்ல பார்த்தாளாமே பக்கத்து வீட்டு பார்வதம்? மவுண்ட் ரோடுல இல்ல உங்க ஆபீசு?
அது வந்து அத்தே....
இதெல்லாம் என்ன கேள்வி அமிர்தம்? ஒருமுறை போன பஸ்ஸை மயிலாப்பூர்ல நிறுத்திட்டா அங்கியே நிக்க முடியுமா? நடந்து அடுத்த பஸ்ஸைப் பிடிச்சிருப்பா. பார்வதம் பார்த்திருப்பா, உங்கிட்ட சொல்லியிருப்பா!
தொடரும்

# டி.கே.சி – ராஜாஜி காதல்

# ரசிகமணி ரசித்த மணிகள்

மீ.ப. சோமு

"வயதான பிறகு செய்துகொள்ளுகிற திருமணத்தைப் போன்றது எங்கள் உறவு'' என்பார் ராஜாஜி, தமக்கு ரசிகமணியிடம் ஏற்பட்ட நட்பை!

''அதை நட்பு என்று சொல்வதை விடக் காதல் என்று சொல்வதே பொருத்தம்!'' என்பார் அடிக்கடி.

''வேறு யார் சொல்லியும் கேட்காத காரியங்களிலும் டி. கே. சி. சொன்னால் ராஜாஜி மசிந்துவிடுவார்'' என்று கல்கி பலமுறை சொல்லியதுண்டு. நானும் பல சந்தர்ப்பங்களில் இதைப்பார்த்திருக்கிறேன். இதைத்தான் 'காதல்' என்று பாச உணர்ச்சியோடு ராஜாஜியே குறிப்பிடுவார்.

1952ல் ராஜாஜி நமது மாநிலத்துக்கு முதல்வராக வர ஒப்புக்கொண்டார் அல்லவா, கவர்னர், கவர்னர் ஜெனரல் போன்ற பதவிகளை யெல்லாம் வகித்த பின், அத்தனை முதுமையிலும் இசைந்தார் அல்லவா, அது எப்படி நடந்தது?

இந்த இரகசியம் அரசியல் உலகிலேயே பலருக்கும் தெரியாது. அதைத் தெரிந்துள்ள நாலைந்து பேரில் ஒருவர் நமது பழைய நிதி அமைச்சர் சி. சுப்பிரமணியம் அவர்கள்.

திருக்குற்றாலத்தில் ஆகஸ்ட் 23ல் நடைபெற்ற ரசிகமணியின் நூற்றாண்டுத் தொடக்க விழாவில் சி. எஸ். இரண்டு பெரிய இரகசியங்களைத் தமது பேச்சிலே வெளியிட்டார். ஒன்று ராஜாஜி கொண்டுவந்த படிப்பு பாதி –தொழில் பாதி என்ற புதிய கல்வித் திட்டத்தின் மூல ஆசிரியர் டி.கே.சி.யே என்பது.

''அந்தக் காலத்தில் இந்தத் திட்டத்தை நாம் ஏற்றுக்கொள்ளாமல் போனது நமது நாட்டுக்கே மிகப் பெரிய நஷ்டம்!'' என்றார் சி.எஸ்.

அவர் வெளியிட்ட இன்னொரு பெரிய இரகசியம்: 1952ல் ராஜாஜி மீண்டும் முதல்வராக ஒப்புக்கொண்டதற்கு டிகேசியே காரணம் என்பதை மிகவும் நுட்பமாகக் கூறினார்.

இந்த நிகழ்ச்சி எப்படி நடந்தது?

துண்டுபடாத மதராஸ் ராஜதானி என்ற மாநிலப் பரப்பில் 1952 தேர்தலில் காங்கிரஸ் கட்சி மகத்தான தோல்விக்கு உள்ளாயிற்று. சென்னையில் ஏற்பட்ட படு-தோல்வியைத் தவிர ஆந்திராவிலும் கேரளத்திலும் கம்யூனிஸ்டுகள் நல்ல வெற்றி பெற்றார்கள். இதில் நெருக்கடி என்னவென்றால், எந்த ஒரு கட்சிக்கும் அமைச்சரவை அமைப்பதற்கு வேண்டிய நிகரமான பலம் இல்லாது போய்விட்டது. 375 பேர் கொண்ட சட்டப் பேரவையில் காங்கிரசுக்கு 152 இடங்களே கிடைத்தன. சுயேச்சை 62. கம்யூனிஸ்ட் 62. பிரகாசம் அவர்கள் இந்த 124 பேரும் வேறு சிலரும் தமக்கு ஆதரவு தருவார்கள் என்று நம்பி அவ்வாறே சொல்லிக் கொண்டிருந்தார். பல்வேறு காளைகள் இணையும்போது அந்த வண்டியை ஓட்டிச் செல்லும் பணிக்கு வெறும் எண்ணிக்கை வலு மட்டும் போதாது அல்லவா? அந்த எண்ணிக்கையும் நிலையில்லாதது தானே? எல்லாரும் அச்சத்தோடு மதித்து ஒத்துழைக்கும்படியான நிருவாகத் திறமையும், துணிச்சலும், சீலமும், எதையும் நடைமுறைக்குக் கொண்டு வருகிற செயலாற்றும் திறனும், எல்லா மாநில மக்களிடமும் ஒருமித்த மரியாதையும் ஆகிய அனைத்தும் சேர்ந்துள்ள ஒருவரே முதல்வராக வேண்டும் என்று எண்ணி சி. எஸ். ஒரு பெரிய கோரிக்கையை விடுத்தார்: ராஜாஜிதான் மீண்டும் பதவிக்கு வந்து காங்கிரஸ் அமைச்சரவையை அமைக்க வேண்டும் என்று! அதோடு 1952 மார்ச் 29ல் கூடிய காங்கிரஸ்



கட்சிக் கூட்டத்தில் இதையே ஒரு தீர்மானமாகவும் கொண்டு வந்தார். ஏ.பி.ஷெட்டி இதை ஆதரித்துப் பேசினார். தீர்மானம் ஒருமனதாக நிறைவேறிற்று. உடனே சி.எஸ். அவர்களும், சௌந்தரம் ராமச்சந்திரன் அவர்களும் தில்லி சென்று கடும் முயற்சிக்குப் பிறகு காங்கிரஸ் மேலிடத்தின் சம்மதத்தையும், நேரு அவர்களின் ஒப்புதலையும், இதன் தொடர்பான கடிதங்களையும் பெற்றுத் திரும்பினார்கள். மார்ச் 31ம் நாள் நடந்த காங்கிரஸ் சட்ட சபைக் கூட்டத்தில் காமராஜ் அவர்கள் ஒரு தீர்மானம் கொண்டு வந்தார்— தமது முதுமையைப் பொருட்படுத்தாமல், தமது ஓய்வைத் தியாகம் செய்துவிட்டு நாட்டின் அன்றைய நிலைமையையும் நலத்தையும் கருதி ராஜாஜி முதல் அமைச்சர் 'பதவியை ஏற்கவேண்டும் என்று! சஞ்சீவி ரெட்டி அவர்கள் இதை ஆதரித்துப் பேசினார். தீர்மானம் நிறைவேறியது.

ராஜாஜியின் மனநிலை என்ன? சி. எஸ். அவர்களும் வேறு சில தலைவர்களும் முதலில் ராஜாஜியைச் சந்தித்துப் பேசியபோது கண்டிப்பாக மறுத்துவிட்டுச் சென்னையில் இருந்தால் தொல்லை நீடிக்கும் என்று 'கருதி, உடனே திருக்குற்றாலத்துக்கு, டிகேசியிடம் சென்றுவிட்டார் ராஜாஜி! ஆனால் அங்கே என்ன ஆயிற்று?

''நாடு இருக்கும் இன்றைய நிலையில் நீங்கள்தான் முதல்வர் பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டும்!'' என்று டிகேசி வற்புறுத்தினார்! யார் சொல்லியும் கேளாத ராஜாஜி ரசிகமணிக்கு மறுப்புச் சொல்ல முடியவில்லை!

திருக்குற்றாலத்திலிருந்து திரும்பிய ராஜாஜி நமது மாநில முதல்வரானதும், பிறகு நடந்த நிகழ்ச்சிகளும் தமிழகத்தின் வரலாறு ஆகும். இதன் தொடர்பாக ஒரு அந்தரங்க நிகழ்ச்சியை இங்கே சொல்கிறேன்.:

1954 பெப்ருவரியில் டிகேசி மரணம் அடைந்தபோது, சென்னையிலிருந்தவாறு ரசிகமணிக்கு அஞ்சலி செலுத்தக் கூடிய விதத்தில் என் பணி அமைந்தது. சென்னை வானொலியில் ரசிகமணி அஞ்சலி நிகழ்ச்சியை ஒலிபரப்பும் பொறுப்பு என்னிடம் ஒப்படைக்கப்பட்டது.

''முதலாவது அஞ்சலி உரை முதல்வர் ராஜாஜியாகத்தான் இருக்க வேண்டும்; நீங்களே தொலை பேசியில் கேட்டு ஒலிப்பதிவுக் கருவிகளை எடுத்துச் செல்லுங்கள்!'' என்றார், அப்போது சென்னை நிலையத்தின் இயக்குநராக இருந்த எஸ். என். மூர்த்தி.

முதலமைச்சர் சீக்கிரமாகவே தலைமைச் செயலகத்திலிருந்து வீடு சென்றுவிட்டதாக அறிந்தேன். வீட்டுக்குத் தொலை பேசினேன்.

ராஜாஜியிடம் எனக்கு எப்போதுமே சில சலுகைகள் உண்டு என்பதை என் நண்பர்கள் நன்கு அறிவார்கள். அத்தனை வேலைகளுக்கு நடுவிலும் அவரே வந்து பேசுவார். ஆனால் அன்று அப்படி இல்லை. முதல்வரின் செயலாளர் வந்தார்.

''முதல்வர் உங்களிடம் சொல்லும்படி சொன்னார். அறையின் கதவுகளை அடைத்துக்கொண்டு படுத்து விட்டார். நெல்லை மாவட்ட ஆட்சித் தலைவர் முதல்வரின் சார்பில் மலர் வளையம் வைக்க ஏற்பாடு செய்திருக்கிறோம்!''

அன்றிரவு டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளையின் அஞ்சலி உரையும், வேறு சில ஒலிப் பதிவுகளும் சேர்த்து, நினைவு நிகழ்ச்சியை ஒலிபரப்பினேன். மறுநாட் காலை முதல்வருடைய கார் அப்போது நான் குடியிருந்த அப்பு முதலி தெருவுக்கு வந்தது. காலை ஏழு மணி இருக்கும்.

''முதல்வர் உங்களை உடனே கூப்பிடுகிறார்''.

பஸுல்லா சாலையில் முதல்வரின் வீட்டுக்கு வந்தேன். ராஜாஜிதான் முதலமைச்சராக வர வேண்டும் என்று கோரிய நிலையெல்லாம் மாறி, அவருக்கு எதிர்ப்பு வலுப்பட்டு வந்த நேரம் அது. வீட்டுக்கு வெளியே பலர் வருவதும் போவதுமாக இருந்தனர்.

''நேற்றையத் துயரம் இன்னும் மாறவில்லை. படுத்திருக்கிறார். உள்ளே வரச் சொல்லுகிறார்!''

கட்டிலுக்கு அருகிலே நான் சென்றபோது ராஜாஜியின் துவண்டுபோன நிலையைக் கண்டேன். அருகில் உட்கார்ந்ததும் என்னைப் பார்த்து அவர் சொன்ன வார்த்தைகளை இப்போது நினைத்தாலும் கண் கலங்குகிறது.

''அவர் அதிருஷ்டசாலி. போய்விட்டார், என்னை மாட்டிவைத்துவிட்டு!'' என்றார் ராஜாஜி ஒரு குழந்தையைப் போல! அதற்கு மேலும் தொடர்ந்தார்:

''சோமு, அவர் அடிக்கடி ஒரு நாட்டுப் பாடல் சொல்லுவாரே, கணவனைப் பிரிந்த மனைவி பாடுவதாக, அந்த வரிகள் என்ன?''

''அது எதற்கு இப்போது?'' என்று தடுமாறினேன்.

''சொல்! அதை இப்போது கேட்கவேண்டும்போல் இருக்கிறது!'' என்றார் ராஜாஜி அழுத்தமாக.

பாடலைச் சொன்னேன்:

''சில்லென்று பூத்த
சிறுநெருஞ்சிக் காட்டுடே
நில்லென்று சொல்லி
நிறுத்திவழி போனீரே!''

ராஜாஜி அந்தப் பாடலைக் கம்மிய குரலிலே மீண்டும் திரும்பச் சொன்னார். பாட்டு முழுவதும் அப்படியே சொன்னார். கைக்குட்டையை எடுத்துக் கண்களைத் துடைத்துக் கொண்டார்.

உண்மையை உங்களிடம் ஒளியாமல் சொல்லுகிறேன். நான் விம்மி அழுது விட்டேன்.

இது நடந்தது பிப்ரவரியில். மே மாதம் ராஜாஜி பதவியிலிருந்து விலகினார்.



# 107 ஸ்பெஷல்
# டிடர்ஜெண்ட் பார்
## அதிவெண்மையாக்கும்
## விசேஷ குணம் கொண்டது.




அதிவெண்மை படைக்கும்
விசேஷ சக்தி கொண்டது.
107 ஸ்பெஷல் டிடர்ஜெண்ட் பார்
மட்டுமே துணிகளின் கூடுதலான
வெண்மைக்கு சிறந்தது. இதன் பொங்கும்
நுரைவளம் அழுக்கை அகற்றி வெண்மையை
பளிச்சிடச் செய்கிறது.

இது மிகவும் சிக்கனமானதும்கூட.

தயாரிப்பாளர்கள் :-
அல்ட்ராமரைன் அண்ட் பிக்மன்ட்ஸ் லிட்.
ராணிப்பேட்டை 632 403 தமிழ்நாடு

Sista's-UPL-30A-81-TAM

# குங்கு பதில்கள்!

✠ என். வாசு, திருக்குறுங்குடி

கே: உண்மைகள் பல சமயம் ஊமைகளாய் உறங்குவ தேன்?

ப: உண்மைகள் உறங்குவதுமில்லை; ஊமை களாக இருப்பதுவுமில்லை. சில சமயம் பொய் என்ற லட்சம் வாட் வெளிச்சத்தின் முன் கண் கூசி உண்மை கண்களை மூடிக் கொள்கிறது. ஆயிரம் இடி முழக்கத்தை மிஞ்சக்கூடிய அளவில் பொய் முழங்கும் போது உண்மையின் எளிமையான குர லோசை கேட்காததால் ஊமையாகி விட்டதாக நாம் கருதுகிறோம். உண்மை யின் குரல் என்றாவது ஒரு நாள் ஒலிக்கும் போது பொய் பிடிபட்டுப் போகிறது.

✠ பாலசுப்ரமணியன், பெங்களூர்

கே: 'கடவுள் சில சமயம் வாய்ப்பு என்ற புனைப் பெயரில் கையெழுத்திடுகிறார்' - தங்கள் கருத்து.

ப: இருக்கலாம். அதில் பல சமயம் நமக்குப் புரியாத மொழியில் கையெழுத்திடுவதால் அதைப் பயன்படுத்திக் கொள்ள முடிவ தில்லை.

✠ எஸ். ஆர். விஜயகுமார், சென்னை-28

கே: ரைவலின் படத்தை எத்தனை தடவைகள் பார்த் தீர்கள்?

ப: ஒரு தடவை. அதுவும் சென்ஸார் செய் யாத படத்தை. போரடித்தது.




✠ ஏ. எம். கண்ணன், மூசிறி

கே: வேங்கடாசலபதி எழுதியதாகக் கடிதம் எழுதி 10 பேர், 20 பேருக்கு அனுப்பச் சொல்கிறார் களே, அப்படி எழுதினால் பலன் உண்டா?

ப: வேங்கடாசலபதிக்கு இப்படிக் கடிதம் எழுதிப் பக்தர்களைத் தேடிக்கொள்ளவேண் டிய அவசியமில்லை. இப்படி நாம் கடி தங்கள் எழுதுவது ஏழுமலையானுக்கு ஏற் படுத்தும் இழுக்கு. கடிதங்கள் எழுதா விட்டால் ஆபத்து வரும் என்று எழுதி விட்டு கீழே வேங்கடாசலபதி என்று டைப் பண்ணுகிறார்கள். துயரங்களையும் தொல்லைகளையும் தீர்ப்பவரா இம்மாதிரி பயமுறுத்தி எழுதுவார்?

✠ டி. எல். ரெட்டி, வேலிடுபட்டி

கே: பள்ளி ஆசிரியர் ஏணி என்றால் அரசியல் வாதி?

ப: கோணி (மூட்டை கட்டுவதால்!)

✠ பி.ஜே.ரத்தன், தஞ்சை

கே: யானையின் பலம் தும்பிக்கையில் மனிதனின் பலம்?

ப: நம்பிக்கையில்!

✠ கே. வி. உமாமகேசுவரி, தெனாரா

கே: இன்றைய எழுத்தாளர்களுக்குள் ஒற்றுமை இருக்கிறதா?

ப: அவரவர் எங்கெங்கோ இருந்து கொண்டு எழுதுகிறார்கள். ஒற்றுமை விரோதம் என்கிற சமாசாரத்துக்கு இடமே இல்லை. ஒருசில கசமுசாக்கள் இருக்கும். ஒரு சரித் திர நாவலாசிரியர் மற்றொரு சரித்திர நாவலாசிரியரைக் கண்டு பொறுமுவார். ஒரு பெண் எழுத்தாளர் மற்றொரு பெண் எழுத்தாளரைப் பற்றி உதட்டைப் பிதுக் கிப் பேசுவார். அவ்வளவுதான். காரசார மாக ஒருவரை யொருவர் தாக்கி எழுது கிறவர்கள், பொது இடத்தில் நட்புரிமை யோடு பழகுவதும் உண்டு. கருத்து வேறு பாடுகள் விரோதமாகாது. கருத்து வேறு பாடுகளற்ற ஒற்றுமை எழுத்தாளர்க ளிடையே தேவையில்லை. ஜனநாயகத்தில் அது ஆபத்தும் கூட.

பரிசு பெறுபவர்

சி. ஜி. பாலசுப்ரமணியன்
186 ப்ளாக் 7
பி. டபிள்யூ. டி. காலனி
வில்ஸன் தோட்டம்
பெங்களூர் 560 027






# ALLWYN

# உலகிற்கு இது ஸீக்கோ.
# நமக்கு இது ஆல்வின்.

ஸீக்கோ தொழில் நுட்பம் இதோ! அதி நவீன கடிகாரத்தொழில் நுட்பத்தின் பயனை நீங்களும் பெறுதற் பொருட்டு, உலகப்புகழ் ஸீக்கோ, ஆல்வின் நிறுவனத்துடன் ஒத்துழைக்கிறது.

இதனால் வகை வகையான மெகானிகல், ஆட்டோமாடிக், குவார்ட்ஸ் கைக்கடிகாரங்கள் துல்லியத்திலும், அழகிலும் அதிநவீன தரத்துடன் கிடைக்கும்.



மேலும் அதிக நம்பகம், நீடித்த உழைப்பு. ஜப்பான், ஸீக்கோ லைசென்ஸின் கீழ் உருவாகும் இவை, ஆல்வின் என்ற பெயரில் விற்பனையாகின்றன.

காலத்திற்கேற்ற கோலங் கொள்ளுங்கள், நீங்களும்.

**ஆல்வின்**
கைக்கடிகாரங்கள்
லைசென்ஸ் ஸீக்கோ

காலம் எட்டும் புதுச்சிகரம்.

HTB-HAM-7476

## 16

மோஹன் அகர்வால் ரீஹாபிலிடேஷன் வார்டுக்குள் நுழைந்தபோது ஹரி சக்கர நாற்காலியில் அமர்ந்தபடி ஏதோ புத்தகம் படித்துக் கொண்டிருந்தான்.

''ஹலோ!''

ஹரி திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தான்.

''ஹலோ!''

''என்ன புஸ்தகம் அத்தனை சுவாரஸ்யமா படிக்கிறே நான் வந்தது கூடத் தெரியாமே?''

''ஆல்வின் டாஃப்லர் எழுதின புஸ்தகம்!''

''யார் அவன்?''

''ஃப்யூச்சர் ஷாக் படிச்சதில்லே?''

அகர்வால் உதட்டைப் பிதுக்கினான்.

''அரே சோடோ யார்! அந்த மாதிரி புஸ்தகங்களைப் படிக்கிறதுக்கு எனக்குப் பொறுமை இல்லே. தற்காலத்திலே கிடைக்கிற அதிர்ச்சிகள் போறுதா? எதிர்கால அதிர்ச்சியைப் பத்தி வேறே கவலைப்படணுமா?''

ஹரி அவனைப் பார்த்துப் புன்னகைத்தான்.

''எதிர்காலத்துக்குத் தற்காலம்தான் அஸ்திவாரம் மோஹன்! சரி என்ன உனக்கு இப்போ புதிசா அதிர்ச்சி சொல்லு.''

''புதுசா ஒண்ணுமில்லே. உனக்கு இந்த மாதிரி ஆன அதிர்ச்சியே எனக்கு இன்னும் போகல்லே. இப்பவும் லஞ்ச் டயம்போது உன் ரூமுக்குப் போறதுக்குக் கால் கிளம்பறது!''

ஹரியின் மனசில் சட்டென்று ஒரு நெகிழ்ச்சி ஏற்பட்டது. டில்லியில் இருந்த இத்தனை வருஷங்களில் எந்தவித சம்பந்தமுமில்லாத இந்த அகர்வால்தான் அவனுக்கு நெருங்கியவன் என்று தோன்றிற்று. இவன் அசாதாரணமானவன். அவனைப் பார்க்க, மகா கரிசனத்துடன் வாரத்துக்கு இரண்டு நாட்கள் வருகிறான். வரும்போதெல்லாம் பழமோ ஹார்லிக்ஸோ கையில் — யார் இப்படி இருப்பார்கள்? தன் உணர்ச்சிகளை மறைத்துக் கொண்டு அவன் சிரித்தான்.

''யூ நோ ஸம்திங்? நானே அந்த ஷாக்லேந்து மீண்டு வந்தாச்சு.'' அகர்வால் சற்று நேரம் அவனை யோசனையுடன் பார்த்தான். பிறகு சங்கடத்துடன் தலையைக் குனிந்து கொண்டான்.

ஹரிக்குச் சிரிப்பு வந்தது.

''என்னை உற்சாகப்படுத்த வரதா உனக்கு எண்ணம். கடைசியிலே உன்னை நான் உற்சாகப்படுத்த வேண்டியிருக்கு. என்னைப் பார். எனக்கு என்ன குறைச்சல்? கட்டில்லேந்து வீல் சேருக்கு வந்து என்னாலே உட்கார முடிகிறது. வீல் சேரைத் தள்ளிண்டு இந்த வார்ட் முழுக்கச் சுத்தறேன். எல்லா

# அந்தி நேரத்து உதயங்கள்

வாஸந்தி



வேலையும் நானே செய்துக்கறேன். இந்தச் சேர்லே உட்கார்ந்தபடியே...''

அகர்வாலின் முகத்தில் இன்னும் சங்கடம் தெரிந்தது. அவனுடைய பார்வை ஹரியின் பைஜாமாவுக்கு வெளியே ரப்பர் கீழிறங்கி செருக்குக் கீழ் இருந்த பாட்டிலின் மேல் பதிவதைப் பார்த்தான். தன் சங்கடத்தை மறைத்துக் கொண்டு சிரித்தான்.

''அது ஒண்ணுதான் என்னாலே முடியல்லே. ஆனா ஒரு வேடிக்கை. நீ நம்புவையோ நம்ப மாட்டியோ. அந்த விஷயமெல்லாம் எனக்கு ஞாபகமே இருக்கிறதில்லே. இந்தக் காத்திடரோடயே நான் பிறந்த மாதிரி எனக்குத் தோண ஆரம்பிச்சுடுத்து. ஒரே ஒரு கஷ்டம். சினிமா ஹீரோ மாதிரி காதலிக்க முடியாது!''

''எனக்குப் புரியல்லே!''

''இந்தக் காத்திட்டரைத் தூக்கிண்டு எப்படி ஹீரோயினோட ஓடி ஆடறது?''

அகர்வால் பக்கென்று சிரித்தான். பிறகு யோசனையுடன் அவனைப் பார்த்தபடி சொன்னான்.

''டாக்டர் உன் காலைப் பத்தி என்ன சொல்றார்?''

''கால் போனது போனதுதான். கொஞ்ச நாள்லே காலிப்பர் போட்டு நடக்க வைப்பார். அப்படி நடந்து பார்க்கறது, மொதல்லெ கொஞ்சம் கஷ்டமா இருக்கும் அப்புறம் பழகிடும். எதுவும் பழகுகிற வரைதான் பயமும் அதிர்ச்சியும்.''

மோகன் முகத்தில் கவலைக் குறி!

''ஏதோ உன் மனசிலே இருக்கு அதான் இப்படி இருக்கே. வாட்ஸ் தி மேட்டர்? உங்க அக்கா எப்படி இருக்கா?''

''இன்னும் மோசம். புருஷன் செத்துப் போனப்புறம் எதுக்கெடுத்தாலும் விரதம், பட்டினி. அந்த அயோக்கியனுக்காக ஏன் இப்படி உருகறேன்னு ஒரு நாளைக்குக் கேட்டேன். அன்னிலேருந்து என்னோட பேசற தில்லே!''

''புவர்கேர்ல்! அதிருக்கட்டும், மாயாவைப் பற்றி ஏதாவது நியூஸ் உண்டா?''

தயங்கினான் மோகன்.

''அவுட் வித் இட்.''

''மாயாவுக்குக் கல்யாணம் ஹரி!''

ஒரு விநாடி இதயம் துடிக்க மறந்தது. சட்டென்று தன்னைச் சமாளித்துக்கொண்டு ஹரி சிரித்தான்.

''இந்த நியூஸுக்கு நான் தயாராகி எத்தனையோ நாளாயிடுத்து மோகன். இட் இஸ் எவெரி குட் நியூஸ். உங்க அக்கா மாதிரி எல்லாப் பெண்களும் இருந்தாத்தான் கஷ்டம். மடத்தனம்னு நீயே சொல்லுவே. யார் பையன்?''

''யாரோ ஒரு ஐ.ஏ.எஸ்.''

ஹரி லேசாக விசிலடித்தான்.

''எனக்கு ஆக்ஸிடெண்ட் ஆனது அவளுக்கு நல்லது மோகன்!''

''ஐ டோன்ட் நோ. சமீபத்திலே அவளை எங்கேயோ பார்த்தேன். ரொம்ப இளைச்சிருக்கா.''

''அவளுடைய இளைப்புக்கு நான்தான் காரணங்கற எண்ணமா உனக்கு? அந்த மாதிரி எண்ணம் எனக்கு எந்த விதத்திலேயும் லாபமில்லே. அது நிஜமும் இல்லே. எனக்கு வருத்தமே இல்லே மோகன்! அவளுக்கு வேறே இடத்திலே கல்யாணமாக வேண்டியது நியாயமானதுதானே?''

''நீ இப்படி இருக்கிறது எனக்கு ரொம்ப சந்தோஷமா இருக்கு. உடல் குறையோட மனசிலேயும் குறை ஏறிடுத்துன்னா ரொம்பக் கஷ்டம். உனக்கு நல்ல மனசு. உனக்கு ஆங்காரமில்லே. அருமையில்லே. எனக்குத்தான் சேதி கேட்டதிலேந்து மனசு சரியாயில்லே. மாயா மேலே உனக்கு எத்தனை பிரியம் இருந்ததுன்னு எனக்கும் ரூபா சிங்குக்கும் தெரியும்!''

''அது ஒரு அழகிய கனவு மோகன்'' என்றான் ஹரி இங்கிலீஷில். ''கனவைப் பத்தி எத்தனை நேரம் நினைக்க முடியும்?''

பிறகு காத்திட்டரைச் சுட்டிக் காட்டி, ''இதோ இதுதான் நிஜம். இதைப் பார்த்துண்டே யிருக்கும்போது கனாக் காண்பேனா?'' என்றான்.

மோகன் ஆதரவுடன் அவன் கைகளைத் தட்டினான்.

''இன்னும் ஒரு மாசம் ஆகுமா உனக்கு இங்கிருந்து கிளம்ப?''

''ஆகும்.''

''அதுக்கப்புறம்என்ன பண்ணப்போறே?''

''ஏதாவது வெத்தலே பாக்குக் கடை வைக்கலாம்னு பாக்கறேன். தமிழிலே ஆயிரத்தெட்டு வாரப் பத்திரிகை இருக்கு. அதையெல்லாம் வாங்கிக்கடையிலே தோரணமாக் கட்டுவேன்.''

''அதை விட ஒரு நல்ல பிளான் நான் வெச்சிருக்கேன். சொந்தமா ஒரு பெட்ரோல் பங்க்.''

''வெரி குட்! பணம்?''

''பணத்துக்கென்ன டில்லியிலே பஞ்சம்? உன்னுடைய கிராசுவிடி பணமே இருக்கும். அதோட பாங்க்லே லோன் கிடைக்கும்.''

''ஓ மறந்தே போனேன். என்னை மாதிரி இருக்கிறவாளுக்குன்னு இந்த வருஷம் விசேஷ சலுகைகள்உண்டு இல்லே? எப்படிகரெக்ட்டா இந்த வருஷம் பார்த்துநான்ஆக்ஸிடெண்ட்லே மாட்டிண்டேன். வாட் டு யு ஸே?''

''நீயும் உன் ஜோக்கும்! நான் கிளம்பறேன் ஹரி. உன் ஆஃபீஸ் விவகாரத்தை யெல்லாம் நான் பாத்துக்கறேன்.''

''தாங்க்யூ. புது எம். டி. எப்படி இருக்கார்?''

''பழைய எம். டி.யை விடத் தேவலே.''

மோகன் போய் வெகு நேரத்துக்கு மனசுக்குள் ஏதோ அரிப்பு இருந்தது. என்ன என்று புரியாத அரிப்பு.

மாயாவுக்குக் கல்யாணம். அந்தச் செய்திதான் நிதானமான அதிர்வலைகளை உள்ளே செலுத்துகிறதா?

அவன் நாற்காலியின் அடியில் இருந்த பாட்டிலை எடுத்து மேலே ஓரத்தில் வைத்துக்







'முச்சூடு'

'மூன்று நூலிழைய நாலிக் கனாவி, நாள் முழுவதும் வேலை செய்தேன்' என்பதைத் தான் 'நான் முச்சூடும் வேலை செய்தேன்' என்கிறார்கள்.

கண்ணதாசன் ஜெகியதைச் சொட்ட ஞானகி மனுஜன்

# வண்ணங்களில் எண்ணத்தை பிரதிபலிக்க பிஜிபியின் பட்டுப் புடவைகள்

காஞ்சீபுரம்/ தர்மாபுரம ஆரணி/ பனாரஸ் பட்டுப் புடவைகள், பட்டு வேட்டிகள் மற்றும் மில் ஜவுளிகள் நியாய விலையில்



ஏர்கண்டிஷண்ட் ஷோரூம்

**பி.கோவிந்தசாமி பிள்ளை எண்டர்பிரைஸஸ்**

258, ஔவை சண்முகம் சாலை
சென்னை 600 086
போன்: 86709

SUSAK PGP 1005

10% சிறப்புத் தள்ளுபடி, 10-10-81 முதல் 26-10-81 வரை
ஞாயிற்றுக்கிழமைகளிலும் விற்பனை உண்டு

கொண்டு நகர்ந்தான். தினமும் செய்விக்கப்படும் தேகப்பயிற்சியால் புஜங்களுக்கு நல்ல வலு வந்திருப்பதை அவனால் உணர முடிந்தது.. நல்ல வேளை முதலில் பயந்த மாதிரி அவன் ஒன்றுக்கும் உதவாத ஜடப் பொருளாகிவிடவில்லை. அவனது அத்தியாவசியமான தேவைகளை அவனாகவே கவனித்துக் கொள்ள முடியும். அவனுக்குக் கௌதமின் நினைவு வந்தது. அவன் இறந்துபோன அன்று தொங்கிப்போன முகங்களுடன் டாக்டர்களின், நர்ஸ்களின் வருத்தம் ஞாபகம் வந்தது. அந்த நிகழ்ச்சி ஏற்படுத்திய அதிர்ச்சியில் நெகிழ்ந்துபோய்த்தான் சாந்தி தனது அந்தரங்கங்களை அவனிடம் பகிர்ந்துகொண்டாள்.

அந்த நிலா வெளிச்சத்தின் பின்னணியில் சோகச் சித்திரமாக இருந்த அவளுடைய முகம் இன்னும் பசுமையாகக் கண்ணில் நின்றது.

எத்தனை அற்புதமான பெண் அவள்! அவளிடம் எப்படி ஒருத்தன் அந்த மாதிரி குரூரத்துடன் நடந்து கொள்ள முடியும்?

சக்கரங்களைச் சுழற்றியபடி அவன் பழகிப் போன ஒரு லாகவத்துடன் நகர்ந்தான். முன்பு ராம்ஸிங் படுத்திருந்த படுக்கையில் மித்தல் என்ற ஒருத்தர் படுத்திருந்தார். திடீர் என்று ஏற்பட்ட பாரிச வாயுவில் ஒரு காலும்கையும் சுவாதீனமிழந்தார். அவரைப் பார்க்க யாரும் வரவில்லை என்ற உணர்வில் அவன் அவர் கட்டில் அருகில் சென்றான்.

''ஹலோ மிஸ்டர் மித்தல்! எப்படி இருக்கிறீர்கள்?''

மித்தலிடம் அசாத்தியமான சோர்வு தெரிந்தது.

''எப்படி இருப்பேன்? பாதி உடம்புதான் இருக்கிறது!''

''கலங்காதீர்கள்.''

''பொறுப்புள்ளவன் கலங்காமல் இருக்க முடியாது. இரண்டாயிரம் ரூபாய் சம்பாதிச்சிண்டிருந்தவன் இப்படிப் படுத்து விட்டேனால் குடும்பத்துக்கு என்ன கதி சொல்லுங்கள்!''

ஹரி அவருடைய கையை லேசாகத் தட்டினான்.

''உங்கள் கவலை எனக்குப் புரியாமல் இல்லை. இந்த அதிர்ச்சி கொஞ்ச நாளைக்கு இருக்கும். எனக்கும் இருந்தது. உங்களை மாதிரி எனக்குக் குடும்பம் இல்லாவிட்டாலும் என்னுடைய வாலிபத்தை யாரோ முறித்துப் போட்ட மாதிரி ஒரு அதிர்ச்சி ஏற்பட்டது. பிறகு மெள்ள மெள்ளச் சமாதானமாகிப் போனேன்.''

மித்தல் ஒரு நீண்ட விநாடி அவனை ஆராய்ந்தார்.

''கல்யாணம் ஆகியிருக்கா?''

''இல்லை. நல்ல வேளை. ரொம்ப முறுக்கேறிப் போயிருந்த உடம்பு இது மிஸ்டர் மித்தல்! இந்த விபத்து எனக்கு நேர்ந்ததும் மனசில் சன்யாசம் ஏற்பட்டுப் போச்சு.''

''வேறே வழி?''

''அது மாத்திரமில்லை. ரொம்ப ரொம்ப அவசியம்னு நாம நினைச்சதெல்லாம் வாஸ்தவத்திலே எத்தனை அற்பமானதுன்னு புரிந்தது இங்கே வந்தப்புறம்.

''இத்தனை ஜனங்கள் படற கஷ்டத்தைப் பார்த்தப்புறம் நான் அத்தனை ஆரோக்கியமா இருபத்தி எட்டு வருஷங்கள் வாழ்ந்ததே நான் செஞ்ச அதிர்ஷ்டம்னு தோணறது. கையும் காலும் நன்றாயிருக்கிறப்போ அதோட முக்கியத்துவம் யாருக்குத் தெரிகிறது? ஆனா நமக்கெல்லாம் ஒரு பிடிவாதம் வேணும் மிஸ்டர் மித்தல்! விதி உங்களைக் குரூரமா வஞ்சித்து விட்டதுன்னு உங்களுக்குத் தோணறதா? அதன் வஞ்சனைக்குப் பயந்து அடிபணிஞ்சு போயிடக் கூடாதுன்னு உங்களுக்கு ஒரு பிடிவாதம் ஏற்படணும். இந்தப் பாதி உடம்பை வெச்சண்டே எப்படிக் குடும்பத்துக்குப் பாரமில்லாம இருக்கலாம்னு தீவிரமா யோசியுங்கள். ஏதாவது வழி தெரியாமல் போகாது. டாக்டர்கள் சொல்றதிலே நம்பிக்கை வெச்ச எல்லாப் பயிற்சியும் சோம்பலில்லாமல் பண்ணினா நிச்சயம் பலன் இருக்கும்! மெள்ள மெள்ள.''

''தாங்க்யூ மிஸ்டர் ஹரி!''

ஹரி யோசனையுடன் வார்டை ஒட்டிய பால்கனிக்குச் சென்றான். பார்வையாளர்கள் வீடு திரும்பும் சமயம். ஆஸ்பத்திரி காம்பவுண்டு ஜே ஜே என்றிருந்தது.

அந்தக் கும்பலில் சாந்தி ஒரு நர்ஸுடன் சிரித்தபடி போவது தெரிந்தது. தனக்கு மிக மிக ஆப்தமான ஒருத்தியைப் பார்க்கிற மாதிரி அவனுள் ஒரு நெகிழ்வு ஏற்பட்டது. சட்டென்று மனசில் ஒரு உணர்வு தாக்கிற்று.

'இன்னும் ஒரு மாதம்தான் இவளுடைய சிநேகிதம் நமக்கு. அதற்குப் பிறகு என்ன செய்யப் போகிறோம்?'

(தொடரும்)



# கேசத்துக்கு மென்மையும் பட்டுத்தன்மையும் தரும் இயற்கையான பராமரிப்பு

ஸ்வஸ்திக் சீக்காய் சோப்பில் சுத்தமான சீக்காயின் இயற்கையின் எல்லா நற்குணங்களும் நிரம்பியுள்ளன. உபயோகிப்பது மிகவும் சௌகரியமானது. திரவ ஷாம்பூவைவிட மிகவும் சிக்கனமானது.

வளமான நறுமணமிக்க நுரை உங்கள் கேசத்திற்கு மணமூட்டுகிறது, மென்மையுடன் கேசம் முழுவதையும் சுத்தமாக்குகிறது. உங்கள் கேசம் ஆரோக்கியமுடன் பளபளக்கிறது, புதுமையான மணம் வீசுகிறது.




## ஸ்வஸ்திக் சீக்காய் சோப்

சீக்காய் அடங்கியது—இந்தியப் பெண்மணிகளின் எழிலோங்கும் கேசத்தின் பரம்பரை ரகசியம்!

shilpi dm 25/79 tam.

# கணேஷுக்கு ஒரு பாராட்டு!



'விஜேதானந்த்'

அனு உறக்கம் கலைந்து எழுந்தாள்.

மனசு உற்சாகமாக இருந்தது.

இருபது நாட்களின் முயற்சியில் ஒரு பழம் கையில் விழுந்திருக்கிறது.

அம்மாவுக்கு இஷ்டமில்லை. ஆறுதலாகப் பேசித் திருப்திப்படுத்தினாள். அப்பாவின் முகத்தில் வேதனைக் கறுப்பு சாயம் பூசியிருந்தது. இதமாய்ப் பேசி அதைத் துடைத்தாகி விட்டது.

குளித்துவிட்டு வந்து உடை மாற்றிக்கொண்டு நின்றபோது மணி எட்டு.

இன்னும் ஒரு மணி நேரத்தில் புறப்பட்டு விடுவாள்.

ஏழு இடங்களுக்கு விண்ணப்பம். மூன்று இடங்களிலிருந்து நேர்முகத் தேர்வுக்கு அழைப்பு. ஒன்றிலிருந்து சாதகமான பதில்.

இன்றுமுதல் வேலைக்குப் போகப் போகிறாள். எல்லாம் ஒரு மாறுதலுக்காக. ஓர் ஆறுதலுக்காக.

புறப்பட்டபோது அம்மா டிபன் பொட்டலத்தைக் கையில் கொடுத்தாள்.

கண்களில் மார்கழி மாதத்து வைகறைப் போதின் பனி முத்துக்கள்.

''என்னம்மா இது? கொஞ்சம் சிரிச்சுத்தான் என்னை வழியனுப்பி வையேன்!...''

கொஞ்சலாகச் சொன்னாள்.

''எப்படிடி சிரிக்கிறது? கல்யாணத்தைப் பண்ணிண்டு புருஷனோட வாழப் போக வேண்டிய வயசுல இப்படி ஆம்பளைகளுக்குப் போட்டியா நானும் வேலைக்குப் போறேன்னு கிளம்பிட்ட உன்னைப் பார்த்து எப்படி சிரிக்க முடியும்?''

''இப்படித்தான் சிரிக்கணும்...''

சிரித்துக் காண்பித்தாள். கலக்கத்துக்கு மத்தியில் அம்மாவுக்கும் சிரிப்பு வந்து விட்டது.

''இப்பத்தான் நீ என்னோட அம்மா...''

கன்னத்தில் அழுந்த ஒரு முத்தத்தைப் பதித்துவிட்டுப் புறப்பட்டாள்.

அழைப்பு மணிக் குமிழை அழுத்தினார் அனந்தராமன்.

வந்த பியூனிடம் கணேஷுக்குச் சொல்லி அனுப்பினார். கணேஷ் வந்தான்.

இருபத்தாறு வயசு இளைஞன். அலுவலகவேலையில் கெட்டிக்காரனாக இருப்பானோ? முகம் அப்படித்தான் சொல்லிற்று.

''மிஸ் அனுராதா. புது அப்பாயின்ட்மெண்ட். பாஸ்கரோட இடத்துல போட்டிருக்கு. கொஞ்சம் கைட் பண்ணு...''

அமைதியாகச் சொன்னார்.

''சரி, சார்....''

சொல்லிவிட்டு அவனுடைய முகத்தைப் பார்த்தான்.

கண்களில் மின்னல். மனசில் இடிஇடித்தது.

'கணேஷ்....'

பார்த்த முகம். ஆமாம். பார்க்க வந்த முகம்.

அந்த ஆறாவது வரன்!

ஆறாவது வரன்.

'இந்த இடமாவது குதிர்ந்தா வர தையிலே கல்யாணத்தை முடிச்சுடலாம்....' — அப்பா ஆசைப்பட்டார்.

வந்தவர்களுக்கு அவளைப் பிடித்திருந்தது.

பிள்ளை வீட்டவர்கள் தங்கள் எதிர்பார்ப்பைச் சொன்னார்கள். பெண்ணைப் பெற்றவர்கள் தங்கள் சக்தியைச் சொன்னார்கள். அரை மணி நேரம். ஒரு பேரத்தின் விரயங்கள்.

விவகாரம் அதோடு முடிந்தது.

ஆறாவது வரனும் தேறாது போயிற்று.

பதினைந்து நாட்களில் அவர்களுக்குள் ஒரு சகஜ பாவம் பூத்திருந்தது.

ஒரு நாள்.

''நான் ரொம்ப வருத்தப்படறேன்...'' என்றான் கணேஷ்.

''எதுக்காக வருத்தப்படணும்?''

''என் அம்மாவுக்கு எதிர்பார்ப்புகள் அதிகம். அதன் காரணமா உன்னை இழக்கும்படியா ஆயிடுத்து....''

''உங்க அம்மாவோட எதிர்பார்ப்புகளுக்கு ஏற்ற மாதிரி ஓர் இடம் அமையாமலா போயிடும்?''

அவளுடைய பேச்சில் ஒடிப் பிடித்து விளையாடிய நையாண்டித்தனம்.

சிரித்தான். சத்தில்லாத சிரிப்பு. வெறும் சக்கை.

அடுத்த முதல் தேதி.

அம்மாவின் கையில் சம்பளத்தைக் கொண்டு தந்தாள் அனு.

''என்னடி இதெல்லாம்?....''

மனசின் சங்கடம் அந்த முப்பது நாட்களில் இன்னும் முற்றாகக் காய்ந்துவிடவில்லை.

''ஒண்ணுமில்லேம்மா. அப்பா என் படிப்புக்காகச் செலவழிச்ச பணத்துல இது ஒரு பெருங்காயத் துண்டு!...''

''போறும். பேசாம வீட்டில கிடக்கிறதை விட்டுட்டு...''

பழைய பல்லவியையே விருத்தமாக இழுக்கப்போன அம்மாவின் வாயைப் பொத்தினான்.

''இரும்மா. கொஞ்ச நாள் வெளி உலகத்தை வேடிக்கை பார்க்கலாம்னுதான் வேலையிலே சேர்ந்தேன். இப்ப ஒவ்வொருத்தரையும் ஸ்டடி பண்ணிட்டிருக்கேன்...''

சொன்னவள் கணேஷைப் பற்றியும் சொன்னாள்.

''அவரும் அதே ஆபீஸ்தானா?''

''அதே ஆபீஸ் மட்டுமில்லே. ஆபீஸ் வேலையைப் பொறுத்தமட்டிலும் என்னோட குருநாதரே அவர்தான்!....''

அந்தக் கலகலப்பான சுபாவம் ஒரு பிதுரார்ஜித சொத்து. அனு அப்பாவின் வம்சம்.

அதே இரவு.

கணேஷ்!

படுக்கையில் படுத்தபோது தூக்கம் கட்டிலை விட்டு இறங்கி எங்கோ உலாவப் போய் விட்டது.

அனு கண்களில் குறுக்கும் நெடுக்கும் போய் வந்துகொண்டிருந்தாள்.

அவளது கலகலப்பான பேச்சு, அவளிடம் காணும் சுறுசுறுப்பு, அந்தக் கவர்ச்சி மிகுந்த கண்கள்.

அன்று அம்மாவின் சொல்லைத் தட்ட முடியாமல் அவளைத் தட்டிக் கழித்துவிட நேர்ந்ததை எண்ணி வெட்கப்பட்டான். பக்குவமாக எடுத்துச் சொல்லவேண்டும். 'அவளைத்தான் கல்யாணம் பண்ணிக் கொள்வேன்' என்று பிடிவாதமாகச் சொல்லிவிட வேண்டும்.

அனுவுக்கு அந்த அலுவலகம் ஒரு தேவாலயம்.

மானேஜர் ரொம்பவும் பரிவு காட்டுகிறார். சக ஊழியர்கள் மரியாதை கொடுத்துப் பேசுகிறார்கள். அவளுக்குப் பிடித்துப் போனதில் வியப்பில்லை. தினமும் ஓர் எட்டு மணி நேர மாற்றாக அந்த அலுவலகம் நிம்மதியின் சந்நிதானம் போல் அவளுக்குக் காட்சியளித்தது.

''அனு! நியூமராலஜி படிச்சிருக்கியா?''

''என்ன... இன்னிக்கு திடீர்னு ஒரு புது சப்ஜெக்ட்டுக்கு வந்திருக்கீங்க?''

''ஜஸ்ட் ஃபார் எ சேஞ்ச்...''

''படிச்சதில்லே....''

''ஒரு சுவாரஸ்யமான சப்ஜக்ட். அதிலும் பெரிய பெரிய தலைவர்களோட பிறந்த நாளையும், பெயரையும் ஒரு குறிப்பிட்ட எண்ணுக்குக் கொண்டு வந்து ஸ்டடி பண்ணும்போது அதனோட ரிசல்ட் ஆச்சரியப் பட வைக்கும்....''

''அப்படியா?''

''உன்னோட பிறந்த தேதியைச் சொல்லேன்...''

தேதியையும் பெயரையும் எழுதிக்கொண்டு ஏதேதோ கணக்குப் போட்டான்.

''உன்னோட எண் ஏழு. ஏழின் லட்சணம் என்ன தெரியுமா? பருமனா இருக்க மாட்டாங்க. வட்டமான முகம். சாத்விகமான குணம். ஏழின் ஆதிக்கம்தான் அவர்களுக்கு எதிலேயும் கைகொடுக்கும்....''

இன்னும் அந்த ஏழைப் பற்றி அவளுக்குப் பொருந்தி வருகிற மாதிரி, அவள் சிலிர்த்துப் போகிற மாதிரி ஏதேதோ சொல்லிக் கொண்டே போனான்.

ஞாயிற்றுக் கிழமை.



ஓய்வாக இருக்கையில் அம்மாவின் மனசை மாற்றும் முயற்சியில் இறங்கத் தீர்மானித்தான் கணேஷ்.

அவனது சொல்லாட்சியின் சாமர்த்தியத்தில் அவனுடைய எதிர்ப்புக்கள் கொஞ்சம் கொஞ்சமாக உதிர்ந்தன.

''என்னமோ.... உன் இஷ்டம் அது வாறு அதுக்கு மேலே நான் என்னடா சொல்ல முடியும்?'' என்றாள்.

'அனு! நாளைக்கு வஞ்ச் டயத்தில நான் எடுத்துக்கப்போற சப்ஜெக்ட் நம்ம கல்யாணத்தைப் பற்றித்தான்...'

மானசீகமாக அனுவுக்குத் தந்தியடித்தான் கணேஷ்.

திங்கட் கிழமை இடைவேளை.

பதிவேடுகள் சாதுவாகப் படுத்திருந்தன. கோப்புகள் கூடாரம் போட்டிருந்தன.

அவன் ஆரம்பிக்க நினைத்தபோது அவள் ஆரம்பித்தாள்.

''கணேஷ்! உங்களுக்கு என் பாராட்டு.''

தான் அம்மாவைச் சம்மதிக்க வைத்து விட்டது இவளுக்கு எப்படித் தெரிந்திருக்க முடியும் என்று நினைத்தான்.

''என்ன விழிக்கிறீங்க?''

''புரியலியே!....''

''உங்க நியூமராலஜி. அந்த ஏழின் ஆதிக்கம்....''

''சொல்லு....''

''நேற்று ஏழாவதா ஒரு வரன். கிராஜுவேட். பாங்கில வேலை. அப்பா, அம்மா, அண்ணன், தங்கைன்னு ஒரு சின்னக் குடும்பமோட என்னைப் பார்க்க வந்தாங்க...''

''அப்புறம்?....''

''அப்புறம் என்ன?... அதான் உங்களை முதலிலேயே பாராட்டிட்டேனே! அவங்களுக்கு என்னைப் பிடிச்சுப் போச்சு. இன்னும் நாலஞ்சு நாளைல தேதி நிச்சயமாயிடும்...''

கணேஷ் மௌனமானான்.

அந்த ஏழின் ஆதிக்கம் தன்னைத் தூணோடு சேர்த்துக் கட்டிப் போட்டு வாயில் துணியையும் அடைத்து விட்டது போல் உணர்ந்தான்.

# ராணி



● பரதன், பத்மராஜன் (கதை), அசோக்குமார் பிரதாப் டீம் மீண்டும் இணைந்து ராணியை அளித்திருக்கிறார்கள். தலைப்பைப் போலவே கதையும் சிறிது. (நித்யா) வித்தைக்காரன் ஒருவனால் வளர்க்கப்படும் சின்னப் பெண். பருவம் அவள் மேல் புதுக் கோலங்கள் தெளிக்க வெளியே மேய முற்படுகிறது. அவள் காதலிப்பதோ ஒரு லாரி கிளீனரை (பிரதாப்). லாரி டிரைவரும்(பாலன் கே. நாயர்) அவளை மோகிக்கிறான். க்ளீனர் அவர்களை க்ளீன் போல்ட் செய்து அவளை மணக்க மற்ற இருவரும் அவளைத் துரத்திக் கடைசியில் (அ)நியாயமாக மாண்டு போகிறார்கள்.

ஒரு மாறுபட்ட பிரதாப்பைத் தமிழில் பார்க்கலாம். நித்யா வழக்கமான பருவப் பெண். படத்தைத் தாங்குபவர்களோ மூர்க்கர்களாய் வாழ்ந்து காட்டும் பாலன் கே. நாயரும் அச்சன் குஞ்சுவும்தான். கோட்டும் சூட்டும் அணிந்த லாரி டிரைவர்களைச் சமீபத்தில் பார்த்த நமக்கு அசலாய் ஒருலாரி டிரைவரைச் சித்திரிக்கிறார் முன்னவர். அருமையான நடிப்பு. வித்தைக்காரனாய்த் தோன்றும் அச்சன் குஞ்சுவின் முகத்தில் மின்னலாய் மாறும் முக பாவங்கள். குடிசை, ஊனக் குழந்தைகள், கிளீனர் — ராணி காதல் அனைத்தையும் பரதன் அழகாகக் கையாண்டிருக்கிறார். தேங்காய், காந்திமதி, ஒய். விஜயா அனைவரும் தோன்றுவது இது தமிழ்ப் படம் என்பதை நினைவூட்ட.

அசோக் குமார் என்றாலே அழகான ஒளிப் பதிவு. குறிப்பிட ஒரு காட்சி: 'பின்னணியில் ஒரு வெள்ளை வெளேர் அருவி. அதில் நனையும் காதல் ஜோடி. முன்னணியில் ஒரு பெரிய பழுப்பு மரம். சினிமாஸ்கோப்பில் அழகான காட்சி அமைப்பு 35 எம்.எம்.லிருந்து ப்ளோ அப் செய்ததில் சில காட்சிகளில் உருவங்கள் அனாவசியத்துக்கு நீண்டோ சப்பியோ இருப்பது ஒரு குறை.

இரண்டே பாடல்கள் — ''ரண்டும் சுகமில்லா விஸ்வநாதன் சாரே!''

அபாரமான கிளைமாக்ஸ்! நீண்ட சண்டையுடன் கூடிய ஒரு பயணத்திற்குப் பிறகு லாரி ஆங்கில பாணியில் மலையிலிருந்து விழுந்து உருண்டு தீப்பிடித்து வெடித்துச் சிதறுவது அருமையாய்ப் படமாக்கப்பட்டிருக்கிறது.

- சிந்து ஜீவா

# மாலை சூட்டி மகளுக்கு
# மண வாழ்த்தொலிக்க ஓலை தீட்ட வாரீர்
# உங்கள் தவம் பலிக்க...



வாழ்நாள் கனவுகள் பலிக்க...

வாச மல்லிகை வீசிட,
வாழைகட்டி உங்கள்
வாசலில் கொட்டுமேளம் வாசிக்க...

ஆசைச் செல்விக்கு இல்லற வாசல்
திறக்க...

வருகுதே நாளும் கோளும், வருகுதே
வரன் - -
கல்விமானும், கைநிறைவாய் நல்வருவாய்
காண்பவனும், நற்குடி மகனும்,
பெற்ற தாய்தந்தைக்கு
இணையாய்ப் பெண் மீது
பேரன்பு பொழிபவனும்...

எப்படி எங்கு தேடுவீர் அப்படி ஒருவரை !
ஏடு விரித்து அழைக்கின்றோம்
தேடிக்கொள்வீர் - - தேர்ந்த வரன் :
குலமும் கோத்திரமும்
உயர் குடும்ப நிலையும்,
படிப்பும் பணமும் பண்பும் ஏற்றமுறப்
பொருந்துமாறு - -

எடுத்த எடுப்பில் கிட்டும் - -
பல்லாயிரம் குடும்பங்கள் ஆதரித்த
பாதையிலே, உங்கள் செல்விக்கு -
மனம்போல் மாங்கல்யம் ...

உளம்போல் தேர்ந்தெடுப்பீர்,
விளம்பர மேடை இதோ

**THE TIMES OF INDIA**

THE MATRIMONIAL COLUMNS
BOMBAY • DELHI • AHMEDABAD

டைம்ஸ் ஆஃப் இந்தியா திருமணப்பத்திகள்
'காலங்கள்' எல்லாம் சுபம் சுபம் சுபம் !

SIMOES/BC/MAT/81

# மஞ்சு என்றொரு புலிக்குட்டி!

தி. சா. ராஜு

ஜம்மு தவி பாலத்தைக் கடந்த பிறகு ஓட்டுனரிடம் கூறினார் கர்னல்: ''தம்பி இடது பக்கம் திருப்பு, அக்னூருக்குப் போகலாம்!''

டிரைவரின் அருகில் இருந்த கருணாகரன் அவரை ஏறிட்டுப் பார்த்தான்.

''மஞ்சுவைப் பார்க்க வேண்டும்.'' அப்போது அவருடைய குரல் கரகரத்ததை அவன் கவனித்தான்.

''ஆனால் சார், அங்கே இப்போது இராணுவ முகாம் எதுமிராதே!''

''தெரியும். எழுபத்தொன்று உடன்பாட்டுக்குப் பிறகு எல்லைக் கோடுகள் மாறிப் போயின. அதன் விளைவாக அந்தக் கிராமம் பாகிஸ்தான் கடுகுழல் எல்லைக்குள் வந்துவிட்டது. அதனால் அங்கிருந்து முகாமை மாற்றிவிட்டார்கள். என்றாலும் குடும்பங்களும், கட்டடங்களும் பழைய இடத்தில் தான் இருக்கும்.''

சேனாப் நதிப் பாலத்தினருகே விருந்தினர் விடுதி அமைத்திருந்தார்கள். மலர்ப்பூங்கா, விளையாட்டுத் திடல், பொய்க் குளம், பதுமைகள், புல்வெளி, கரை நெடுகச் சிமிட்டிப் பெஞ்சுகள். ஆறு சுழித்துக்கொண்டு ஓடிற்று.

அவர்கள் ராஜ்ஞான் கிராமத்தை அணுகிய போது மணி எழுரைக்கும் அதிகமாகி விட்டது. என்றாலும் இருட்டவில்லை. வழியில் இருந்த காட்டுச் செடிகளில் மலர்ந்திருந்த பூக்களால் ஒரு மலர் வளையம் தயாரித்தார். சாலையின் ஓரத்தில் காரை நிறுத்திவிட்டு மெள்ள மெள்ள அந்த மாமரத்தை அணுகினார். கால் நூற்றாண்டுக்குப் பிறகும் அது பழைய பசுமையுடனேயே பரந்து நின்றது. அதனருகில் நிறுவியிருந்த பளிங்குக் கல்லறையை அணுகியபோது அவர் வியப்படைந்தார். பக்கத்தில் இன்னொரு



பளிங்குச் சின்னம். ஓர் ஓரத்தில் துளசி மாடம். அதன் பிறையில் அகல் விளக்கு. நான்குபுறமும் செதுக்கப்பட்ட முனைக் காம்புகள். அவற்றில் பற்பல வண்ணம் பூசியிருந்தது. சிறுசிறு கரணைகளை இணைத்த சங்கிலி வேலி. சங்கிலியிலும் வெவ்வேறு நிறப் பூச்சு. சுற்றிலும் செம்மண் திடல். ரோஜாச் செடிகள்.

மலர் வளையத்தை இரு பகுதிகளாகப் பிரித்து இரண்டு சின்னத்தின் மீதும் வைத்து வணங்கினார் கர்னல். ஒன்றிலே மஞ்சு உறங்குவது அவருக்குத் தெரியும். மற்றது யாருடையதோ? பரவாயில்லை. ஒருவரது நினைவுச் சின்னம் எப்போதும் வணங்குதற்குரியது. காலணிகளை அணிந்துகொண்டு அவர் புறப்பட்டபோது அந்த முதியவர் எதிரே வந்தார். புருவத்தின் மேல் விரல்களை வைத்து அவர்களை நோக்கினார்.

''நம்பர்தார் ரத்தன் சந்தின் வீடு எங்கே இருக்கிறது பாபா?'' கர்னல் வினவினார்.

''பழைய வீடுதான் ஜெனரல் சாப்.'' அவர் பதிலிறுத்தார். கருணாகரனுக்குச் சிரிப்பு வந்தது. இராணுவ அதிகாரிகள் எல்லாருமே கிராமத்தார்களுக்கு ஜெனரல். மற்றவர்கள் அனைவரும் ஹவால்தார். அநேகமாக வடநாடு முழுவதுமே இதே நிலைதான்.

நாற்புறமும் கிளுவை முள் வேலி. இடையில் சோள வயல். மூங்கில் பரண். பரந்த முகக்கட்டை மரம். அதனருகில் கொட்டகை. உள்ளே எருமைகள், பசுக்கள். சற்றுத் தொலைவில் கயிற்றுக் கட்டில். மண் சுவரில் எழுப்பப்பெற்ற கோட்டை போன்ற வீடு. வாசல் கதவின் நாதாங்கியை ஓசைப் படுத்தினார். சல்வாரும் இறுக்கமான கமீசும் அணிந்த மாது எதிர்ப்பட்டாள். ''யார் வேண்டும்?''

அவர் அவளை ஏறிட்டுப் பார்த்தார். கால் நூற்றாண்டுக்குப் பிறகு அவளைப் பார்க்கிறார். அதே கட்டுக் குலையாத உடலமைப்பு. செம்பவள உதடுகள்; உழைத்து உரமேறிய கரங்கள். அவளுக்கு ஐம்பது வயது என்று யாராவது கூற முடியுமா?

''ஓ....ஓ... நீங்களா?'' — ஒரே கணத்தில் அவளுடைய முகத் தோற்றம் மாறியது. ''ஓ. ஜிட்டு. மன்னூ. வெளியே வந்து பாருங்கள்!'' அவள் கூவினாள். அவரைக் கட்டிலில் அமரும்படி பணிவுடன் வேண்டிக் கொண்டாள். ''இந்த ஏழைகளை நினைவு வைத்துக்கொண்டு தொலை தூரம் வந்து விட்டீர்கள்! எத்தனை ஆண்டுகள் கடந்து விட்டன!'' — அவளுடைய கண்கள் பனித்ததை கர்னல் காண முடிந்தது. அவள் அதை மறைத்துக்கொள்ளும் பொருட்டு மறுபுறம் திரும்பிக் கொண்டாள்.

தொழுவத்தில் கன்று குரல் கொடுத்தது. ''லல்லூ சீக்கிரம் போய்ப் பால் கறந்து கொண்டு வா. விருந்தாளிகள் வந்திருக்கிறார்கள்''. அவள் உரக்கக் குரல் கொடுத்தாள். தானே அடுக்களைக்குள் நுழைந்தாள். சூடாக ஏதோ தயாராவது நாசிக்குப் புலப்பட்டது.

''இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்பு நமது பட்டாலியன் இங்கே தண்டிறங்கியிருந்தது கருணா!'' கர்னல் தம் அட்ஜுடண்டுக்கு விளக்கமாகக் கூறினார். இந்த இடம் முழுவதும் இவளுடைய கணவன் சந்துக்குச் சொந்தமாக இருந்தது. எல்லாம் கோதுமை வயல்கள். குலாப்சந்த் இந்தக் கிராமத்தின் நம்பர்தார். அதாவது நம்மூர் நாட்டாண்மைக்காரரைப் போல. நாங்கள் இங்கே வந்தபோது குலாப்சந்த் காலமாகி இரண்டாண்டுகளே ஆகியிருந்தன. இப்போது சந்தித்தோமே, இந்த அம்மாள் நிர்மலாதான் எல்லா நிர்வாகமும். இரண்டே குழந்தைகள். —மூத்தவன் ரத்து. அவனுக்கு அப்போது ஐந்து வயதிருக்கும். அடுத்தது பெண் குழந்தை. இவர்களுடைய வயல் முழுவதிலும் படையினரின் கூடாரம் அமைக்கப்பட்டு விட்டதால் இவர்களுக்கு மிகுந்த சிரமம் ஏற்பட்டது. அப்போதுதான் நிம்மியுடன் எனக்கு அறிமுகம் ஆயிற்று.

குழந்தை ஜிட்டு கொண்டு வந்த சூடான பாலை அருந்தியவாறே அவர் கேட்டார்: ''ரத்துவுக்கு எத்தனை குழந்தைகள்?''

''இரண்டே பேர். இதோ பார்க்கிறீர்களே. இவர்கள்தாம். நாள் முழுவதும் விளையாட்டு. படிப்பதே கிடையாது. உங்களுக்கு?''

கர்னல் தலையைக் குனிந்து கொண்டார் ஆழ்ந்த நெட்டுயிர்ப்பு.

''ரத்து லைலாம் கிராமத்தில் வசூலுக்காகப் போயிருக்கிறான். இன்னும் சற்று நேரத்தில் வந்துவிடுவான். இன்று நீங்கள்









ஆதாரம்: தினமலர் தகவல்: கு.வி.

அருள்வாக்கு

## அர்த்தம், அனர்த்தம்!



பொதுவாக யாரும் பணத்தை விரும்புகிற மாதிரி குணத்தை விரும்பிப் பிரார்த்திப்பதில்லையே! ஆனால் குணம் இல்லாத இடத்தில் பணம் இருந்து என்ன பிரயோஜனம்? நாம் பணத்தை விரும்பியே உபாசித்தாலும்கூட அம்பாளோ 'இந்தப் பிள்ளை அசட்டுத்தனமாகப் பிரார்த்தனை பண்ணுகிறது. விவேகம் ஏற்படுகிறதற்கு முன்பு அர்த்தத்தை (பொருளை, பணத்தை)க் கொடுத்தால் அது அனர்த்தமேயாகும். எவ்வளவுக்கெவ்வளவு பணம் தருகிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு பாபத்தையே விலை கொடுத்து வாங்கிக் கொள்வான். எனவே பணத்தை எப்படி தர்ம மார்க்கத்தில் பிரயோஜனப்படுத்துவது என்கிற விவேகத்தை முதலில் தந்து, பிறகு தனத்தைத் தரலாம்' என்று எண்ணுகிறாள். குழந்தை பட்சணம் கேட்டால் அதைச் செய்து கொடுக்கிற தாயார் பிற்பாடு அதனால் கெடுதல் ஏற்படாமல் இருக்க ஜீரண மருந்து தருகிறாள். அம்பாளோ அவளுடைய குழந்தைகள் விரும்புகிற பொருளைக் கொடுப்பதற்கு முன்னாடியே சித்தத்தில் கழிவடைகள் சேராமல் விவேகம் என்கிற மருந்தைத் தருகிறாள். ஸரஸ்வதி கடாட்சத்தைத் தந்து அப்புறம் லட்சுமீ கடாட்சத்தைத் தருகிறாள். தைத்திரீயோபநிஷத்திலும் இப்படியே தான் முதலில் ''மேதை (நல்ல புத்தி) யைக் கொடு'' என்று சொல்லி, அப்புறம் ''ஸ்ரீ''யை (செல்வத்தை)க் கொடு'' என்று சொல்லியிருக்கிறது. இதற்கு ஸ்ரீ ஆசார்யாள் பாஷ்யம் செய்யும்போது ''மேதையில்லாதவனுக்கு ஸ்ரீயைத் தந்தால் அனர்த்தம்தான் உண்டாகும்'' என்கிறார். பஜகோவிந்தத்திலும் 'அர்த்தம் அனர்த்தம்' என்கிறார்.

-ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

---

சாப்பிட்டுவிட்டுத்தான் போக வேண்டும்'' அவன் இறைஞ்சினான். ''உங்களுக்குத் தான் தந்தூர் ரொட்டி மிகவும் விருப்பமாயிற்றே!''

''ரத்துவைச் சந்தித்த பிறகே புறப்படுகிறேன்'' கருணாகரனை அழைத்துக்கொண்டு வெளியேறினார் கர்னல்.

இருவரும் மெதுவாக வரப்புவழியாக நடந்தனர். ''அதோ அந்த மேற்குப்புறம் க்வார்ட்டர் கார்டு. அருகில் அரச மரம் இருக்கிறதல்லவா, அதற்குப் பக்கத்தில் யூனிட் மந்திர். வரிசையாகக் கூடாரங்கள். ஆற்றங் கரையிலிருந்து சரளைக் கற்களைக் கொண்டு வந்து தளம் அமைத்தோம். மே, ஜூன் மாதங்களில் இங்கு புயல் காற்று மிகுதி. கயிற்றை அறுத்துக்கொண்டு வெண் துணிக் கூடாரம் வானத்தில் பறப்பது வேடிக்கையாக இருக்கும். இதோ தெரிகிறது பார், உயர்ந்த மரங்களின் தொகுதி. அது அடர்ந்த காடு. ஓய்வு கிடைத்தபோதெல்லாம் நான் அந்த மரங்களிடையே நடப்பேன். அங்கேதான் மஞ்சுவைக் கண்டெடுத்தேன். அப்போது அது பதினைந்து நாள் குட்டி. அதன் தாயாரை யாரோ ஷிகாரி மரண காயப்படுத்தியிருந்தான். தாய் இறந்தது கூடத் தெரியாமல் அதன் மேல் புரண்டு விளையாடிக்கொண்டிருந்தது அந்த மதலை. நான் தாவிச்சென்று கழுத்தைப் பற்றிக் கொண்டேன். முகத்தைத் தடவிக் கொடுத்தேன்.

''அவ்வளவுதான். அதற்குப் பிறகு அது என்னுடனேயே இருந்தது. என் கைத்தடியைக் கவ்விக் கொண்டு வரும். ஹவால்தார் மேஜரின் கால் சராயைப் பற்றி இழுத்து அழைத்து வரும். கடிதங்களை டாக் ஆர்டர்லியிடம் கொண்டு போய்க் கொடுக்கும். மோட்டார் சைக்கிளின் மேல் ஏறி உட்கார்ந்து கொள்ளும். கமாண்டர் சாம்சன் காலையில் பரேடுக்கு வரும்போது அவர் பின்னாலேயே கம்பீரமாகப் பவனி வரும். நமது முகாமில் இருந்த அத்தனை பேருக்கும் அதுசெல்லக் குழந்தை. பிரிகேடியர் ரண்தீர் சிங் வந்தபோது அவர் முன்னால் இரண்டு கால்களை ஊன்றி நின்று வணங்கியது. அவர் மகிழ்ந்துபோய் வெள்ளிச் சங்கிலி பரிசளித்தார்.'' கர்னல் தமது சட்டைக்குள்ளிருந்து அதை வெளியே எடுத்துக் காட்டினார்.

''சுபேதார் ஆறுமுகம் ஒருநாள் என்னிடம் வந்து கூறினார்: அந்தநம்பர்தாரிணி அம்மாவுக்கு உங்களைப் பார்க்க வேண்டுமாம்.''

''நஷ்ட ஈட்டுத் தொகை ஒழுங்காகக் கிடைக்கிறதல்லவா?''என்று வினவியவாறே அவர்களுடைய வீட்டினுள் நுழைந்தேன். நிம்மி அப்போது மிளகாயைக் காய வைத்துக் கொண்டிருந்தாள். அவள் என்னை உட்காரச் சொல்லி லஸ்ஸி கொடுத்தாள். அதிலே ஓரங்குலத்துக்கு ஆடை மிதந்தது.

''முதலில் உங்கள் புலிக்குட்டியின் பெயரை மாற்றுங்கள்.''

''உங்களை அது என்ன செய்தது? அதை இங்கு வரவிட மாட்டோமே!''

நிம்மி சற்றுத் தயங்கினாள். ''பாபுஜி நாங்கள் ஏழைகள்தான் என்றாலும் மான அவமானத்துக்குப் பயப்படுகிறவர்கள்.''

''நீங்கள் சொல்வது எனக்குப் புரியவில்லையே!''

அவள் உள்ளே சென்று ஓர் இள மங்கையுடன் திரும்பி வந்தாள். என் நெஞ்சு ஒரு கணம் துடிப்பை இழந்தது.

''இது என் தங்கை. பெயர் மைத்ரேயி. மஞ்சு என்றுதான் கூப்பிடுகிறோம். நீங்களும் உங்கள் வீரர்களும் இவள் பெயரைச் சொல்லிக் கூவும்போது இவள் பெரிதும் சுகிக்கிறாள்!''

''ஒன்றும் பதில் சொல்லாமல் அன்று நான் திரும்பி விட்டேன். அவளைப் பார்த்த போது எப்போதுமே அந்தப் பெயரை யாராவது சொல்லிக் கேட்க வேண்டுமென்ற ஆவல்தான் நெஞ்சில் நிறைந்தது. அந்த உணர்ச்சிகளை எப்படி விவரிப்பது என்று இப்போதும் எனக்குப் புரியவில்லை.''

''எனக்குப் புரிகிறது ஐயா!'' — கருணாகரன் பதிலிறுத்தான்.

''மஞ்சுவுக்கு அதிகப் படிப்பில்லை. டோக்ரி ஹிந்தி, உருது தெரியும். ஆனால் இந்த மொழிகளை எல்லாம் மீறிய சாதனம் ஒன்று அவளிடம் இருந்தது. அவள் பாடினால் புள்ளினங்கள் பறக்காமல் நிலைக்கும். பசுக்கள் அசைபோட மறந்து போகும். ஆறுகள் இறுகி உறையும். வெண் சுவர்களில் சித்திரம் தீட்டுவாள்.

''சிறுவன் ரத்தன் சந்துக்கு அடிக்கடி இருமல் வருவதுண்டு. அப்போதெல்லாம் ரெஜிமெண்டல் மருத்துவரை அழைத்துக்கொண்டு அவர்கள் வீட்டுக்குப் போவேன். பாலேட்டையும் சீனியையும் கலந்து ஏலக்காய் மணக்க ஒரு கிண்ணம் கொடுப்பாள் நிம்மி.

''மஞ்சுவிடம் எனக்கு எல்லையற்ற ஈடுபாடு ஏற்பட்டது.''

''எந்த மஞ்சுவைச் சொல்லுகிறீர்கள்?'' கருணாகரன் கேட்டான்.

''இரண்டு பேரிடமும்தான்'' கர்னல் பதிலிறுத்தார்.

''ஒரு வயதான பிறகு புலிக் குட்டியிடம் பெரிய மாறுதல் ஏற்பட்டு விட்டது. பெரிய காட்டுப் பூனை அளவு உயரம். நானடைவில் அதைச் சமாளிப்பது கடினமாகி விட்டது. நானோ, எனது ஆர்டர்லி சுப்பையாவோ உத்தரவிட்டால்தான் பணியும். இல்லாவிட்டால் முரண்டு பிடிக்கும். ஒரு நாள் அது முகாமை விட்டு வெளியேறிப் பசுக் கூட்டம் ஒன்றைத் தாக்கிற்று என்று கேள்விப்பட்டதும் நான் மிகுந்த கவலை கொண்டேன். அதற்காகக் கூண்டொன்றைத் தயாரித்தேன்.

''எல்லாவற்றுக்கும் முடிவு ஒன்று உண்டல்லவா? அதன் கூண்டுக்குள் பாம்பு ஒன்று புகுந்து அதன் உயிரைக் குடித்து விட்டது. பட்டாலியனிலிருந்த அத்தனை பேரும் அன்று உணவருந்தவில்லை. முரட்டு வனவிலங்கொன்று இத்தனை பேர்களின் அன்புக்குப் பாத்திரமாக முடியும் என்பதை அன்றுதான் கண்டறிந்தேன். இராணுவ மரியாதைகளுடன் அதை அடக்கம் செய்தோம். செலவைப் பாராமல் கமாண்டர் சாம்சன் அதற்கு நினைவாலயம் ஒன்று எழுப்பினார்.''

இருவரும் மீண்டும் நிம்மியின் வீட்டை அடைந்தபோது மணி ஒன்பதுக்கு மேல் ஆகிவிட்டது. கர்னலின் காலைத் தொட்டு வணங்கி, கைகழுவ நீர் கொடுத்து உள்ளே அழைத்துச் சென்றான் ரத்தன்சந்த்.

சுவை மிகுந்த உணவை அனுபவித்து உண்ட பிறகு தணிந்த குரலில் வினவினார் கர்னல்: ''மஞ்சு சுகமாக இருக்கிறாளா?''

நிம்மி அவரை ஏறிட்டுப் பார்த்தாள். ''உங்கள் பட்டாலியன் புறப்பட்டுப் போன மறு நாளே அவளைக் காணவில்லை. நாங்கள் வேண்டாத சந்தேகமெல்லாம் கொண்டோம். மூன்று நாட்களுக்குப் பிறகு நதியின் மடுவில் அவளுடைய சடலம் கிடைத்தது. தன்னுடைய பெட்டியில் ஒரு சீட்டு எழுதி வைத்திருந்தாள். ''வாழ்க்கையில் பெண் ஒருத்தி ஒரே முறைதான் காதலிக்க முடியும்.''— ஒரே வாக்கியம். உங்கள் புலிக்குட்டியின் சமாதிக்கு அருகில்தான் அவளுக்கும் நினைவாலயம் எழுப்பினோம். இந்த உலகத்தில் நாம் வேண்டுவதெல்லாம் கிடைத்துவிடுவதில்லை. பல தடைகளை நாமே எழுப்பிக் கொள்கிறோம்.'' — அவள் துப்பட்டாவில் கண்களை மறைத்துக் கொண்டாள்.

மீண்டும் அந்த நினைவுச் சின்னங்களின் அருகே வந்து நின்றார் கர்னல் மைக்கேல் ராஜ். மண்டியிட்டு வணங்கிச் சிலுவைக் குறி இட்டுக் கொண்டார். அவர் திரும்பும்போது கால் இடறவே, 'மெள்ள, மெள்ள — வேலி' என்று எச்சரித்தார் அட்ஜுடண்ட்.

''ஆமாம். என் துயரங்களுக்கெல்லாம் வேலிதான் காரணம்'' என்று கூறும்போது கர்னலின் நாவு உலர்ந்து போயிற்று.



# 'ஸ்பாட் பில்லிங்!'

மின்சார வாரியம் 'ஸ்பாட் பில்லிங்' அதாவது மீட்டரைப் பார்த்து உடனே பில்லையும் எழுதித் தரும் முறையை அறிமுகப் படுத்தியுள்ளது. பில் கொடுத்தவுடனே பணத்தையும் செலுத்தி விடலாம்.

இந்த முறை பற்றி ஒரு சிலரிடம் கருத்து கேட்டபோது:



✖ ராஜலக்ஷ்மி



✖ நடேஷ் கே. மூர்த்தி



✖ பிந்து மாதவன்

அசோக் நகரைச் சேர்ந்த திரு. நடேஷ். கே. மூர்த்தி:

இது ஒரு முன்னேற்றமே. மீட்டரைப் பார்த்து உடனே பில் கொடுப்பதில் தவறொன்றுமில்லை. பில்லில் தவறு செய்வதாய்ப் பல பேர் குற்றம் கூறுகிறார்கள். இது புதிய முறையினால் தவிர்க்கப்படும். அவ்வப்போதே பில் தந்துவிடுவதால், பணம் கட்ட அவகாசத்தைச் சிறிது அதிகரிக்கலாம்.

நங்கநல்லூரைச் சேர்ந்த திரு பிந்து மாதவன்:

சரியான பில் கிடைப்பது ஒன்றுதான் அனுகூலம். வரும் ஊழியரிடமே பில் தொகையைச் செலுத்தலாம் என்கிறார்கள். வருபவர் மின் வாரிய ஊழியர் என்பதற்கு என்ன ஆதாரம்? அடையாள கார்டுடன் வந்தாலும் அவர்களிடம் பணப் புழக்கம் ஊழலுக்கு வழி செய்யாதா?

நந்தனத்தைச் சேர்ந்த திருமதி ராஜலட்சுமி:

நான், என் கணவர் இரண்டு பேருமே அலுவலகத்தில் பணிபுரிபவர்கள். நாங்கள் வீட்டில் இல்லாத சமயத்தில் மீட்டரைப் பார்த்து பில்லை எறிந்துவிட்டுப் போய்விடுவார்கள். அது எங்கள் கண்ணில் படாது. பிறகு பில் பணம் கட்டவில்லை என்று மின்சாரத்தைத் துண்டித்து விடுவார்கள். இந்தப் புதிய முறையால் சிக்கல்கள் தான் அதிகரிக்கும்.

மின்வாரிய ஊழியர்களின் கருத்தைக் கேட்டபோது சிலர் சொன்னது: ''தொழில் நுட்பப் பணியாளர்களிடம் தான் இந்த வேலையை ஒப்படைக்கப் போகிறார்கள். இப்போது 80 வீடுகளில் ரீடிங் பார்ப்பவர்கள் 140 வீடுகளில் ரீடிங் பார்த்து பில் தயாரித்துத் தரவேண்டும். ஆனால் ஊதியம் ரொம்ப அதிகமாய்க் கிடைக்காது. அலுவலகத்தில் உட்கார்ந்து இப்போது 800 பேர்களின் கணக்கைப் பார்ப்பவர்கள் அப்போது 2000 பேர்களின் கணக்கைப் பார்க்க வேண்டும். வேலைப் பளு அதிகம். ஆனால் ஊழியர்களின் எண்ணிக்கையைக் குறைத்தாலும் குறைப்பார்களாம்.''

மொத்தத்தில் இந்தப் புதிய 'ஸ்பாட் பில்லிங்' முறைக்கு மின்வாரிய ஊழியர்களிடையே வரவேற்பு இல்லை.

பேட்டி : கலாமூர்த்தி




கருத்து : முத்து

## ஏதாவதொரு மிக்ஸரை வாங்கிவிடாதீர்கள்...




## ... உங்கள் தேவைக் கேற்றது ஸுமீத்

அற்புதமான ஸுமீத்! இதன் வகையில் இந்தியாவிலேயே முதலாவது. நாடெங்கிலும் மேன்மேலும் அதிக இல்லத்தரசிகளுக்கு வியப்பூட்டி வருகிறது.

ஸுமீத்தில் மட்டுமே, எல்லா வேலைகளுக்கும் பயனாகும், விசேஷமாக வடிவமைக்கப்பட்ட, பல-பயனுள்ள ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஜாடி. அதன்மீது உள்ளே பார்க்கக் கூடிய அக்ரிலிக் மூடி. எனவே ஸுமீத் இயங்குவதைக் கண்ணெதிரில் காணலாம்.

பல்வேறு வேலைகளை விரைவிலும் எளிதிலும் செய்து முடிக்க, இப்போது இதில் 4 அலகு அமைப்பு பாகங்கள்.

ஈரப் பண்ட அரைவைக்காக.
உலர் பண்ட அரைவைக்காக.
கடைய, கலக்க, சாறு பிழிய.
மாமிசத்தை அரிக்க,
காய்கறிகளை நறுக்க.

இவை தவிர, சப்பாத்தி, பூரி மற்றும் அப்பளத்துக்காக மாவை விழுதுபோல் பிசைய விசேஷ இணைப்புப் பாகம். அதோடு கேக் மாவை நன்றாகக் கலவை செய்ய விசேஷ 'ஹுக்'...

இவை மட்டுமா? ஸுமீத்தில் 30 நிமிடங்கள் வரை நிற்காமல் ஓடக்கூடிய ஹெவி ட்யூட்டி மோட்டார்.

அற்புதமான ஸுமீத் ஒன்றுதான் முழுமையான கிட்சன் மெஷின். இதை அடைய எத்தனை நாள் வேண்டுமானாலும் காக்கலாம்.



ஈர அரைவை—வடை, இட்லி, தோசைக்காக உளுத்தம் பருப்பு மற்றும் அரிசியை அரைக்க— 3½ நிமிடங்களில்.

உலர் அரைவைக்காக— எல்லா வித மசாலாக்கள்— மிளகாய் வற்றல், மிளகு, மஞ்சள், கொத்துமல்லி விதை ஆகியவற்றை அரைக்க.





பொடிக்க—1 நிமிடத்தில் மாமிசத்தைப் பொடிக்க, காரெட், வெங்காயம், தேங்காய் மற்றும் கொட்டைகளை நறுக்க— விநாடிகளில்.

அரைக்க—2 நிமிடங்களில் தேங்காய் சட்னி அரைக்கலாம். அல்லது விநாடிகளில் கொத்துமல்லி சட்னி அரைக்கலாம்.





கடைய—லஸ்ஸி, மில்க் ஷேக் ஆகியவற்றை ஒரே நிமிடத்தில் தயாரிக்க அல்லது நிமிடங்களில் மயோன்னைஸ் தயாரிக்க. வீட்டிலேயே வெண்ணெய் கடையலாம்.

மாவு பிசைய—சப்பாத்தி, பூரி ஆகியன தயாரிக்க 2 நிமிடங்களில் மாவு பிசையலாம். கேக் மாவை மிகவும் சுலபமாகப் பிசையலாம்— 3½ நிமிடங்களில்.



# ஸுமீத்®

## இது ஒன்றே முழுமையான கிட்சன்மெஷின்

இது தவிர கிடைக்கிறது ஸுமீத் டொமஸ்டிக் (பிசையும் இணைப்பு இல்லாமல் கிடைக்கிறது. அதை தனியாகவும் வாங்கிக் கொள்ளலாம்.)

அற்புதமான ஸுமீத் பரவலாகப் பல்வேறு பணிகளைச் செய்கிறது— மற்ற எல்லா வீட்டுபயோக மிக்ஸர்களை விடச் சிறப்பாக.

எப்போது நாங்கள் இலவசமாக இயக்கிக் காட்டுகிறோம் என்பதைக் கவனித்து வாருங்கள். உங்களுக்கெனவே ஸுமீத் சிறப்பாக இயங்குவதைக் காணுங்கள்!

சர்வீஸ் சென்டர்கள் : சென்னை : சிப்ரோகிராபர்ஸ் அண்ட் என்ஜினியர்ஸ், போன் : 445700/442055; விவேக் ஏஜென்ஸீஸ், போன் : 76923/75661; மெஸர்ஸ் விவேக் அண்ட் கோ., போன் : 444129. மெஸர்ஸ் விவேக் அண்ட் கோ., போன் : 663545; வி.ஜி. பன்னீர்தாஸ் அண்ட் கம்பெனி, போன :812121/88184 கோயமுத்தூர் : ஜே. என்ஜினியரிங் கார்ப்பரேஷன், போன் : 24579, மதுரை : ஜே. என்ஜினியரிங் கார்ப்பரேஷன், போன் : 24028. திருச்சி : ஸ்டாண்டர்ட் எலெக்ட்ரிக் கம்பெனி, போன் : 24343.

OBM/5628 AR/1 TM

# நிகரற்ற ஜனதா டிவி
# TS 32

பிரத்யேகமாக தயாரிக்கப்படும் சாலிடெர் 'ஹை-கெய்ன்' செட்டுகளும் 'பூஸ்டர்களும்' சென்னையிலிருந்து 160 கி.மீ. தொலைவில் வசிப்பவர்களும் உபயோகிக்கவல்லது.

சாலிடெர் TS 32 பெயர் அளவில் மட்டுமே 'ஜனதா', ஆனால் முற்றிலும் ஒரு 'டிலக்ஸ்' டிவியில் இருக்கக்கூடிய அம்சங்களடங்கியது. கீழே கொடுக்கப்பட்டுள்ள அம்சங்கள் அனைத்தையும் ஒருங்கே அளிக்கவல்ல டிவி சாலிடெர் ஒன்றே :

- சிறந்த தொழில் நுட்பம், தரமிகுந்த உறுப்புகள்.
- 'விஷன் இன்டர்மீடியட் ஃப்ரிகு வன்ஸியில்' (VIF) கண்டுள்ள முன்னேற்றத்தினால் நிகரில்லா படத் தோற்றம்.
- ரெக்கார்டு பிளேயர், டேப் ரெக்கார்டர் ஆகியவற்றை இணைக்க 'பிக்-அப்' வசதி.
- மல்டி-சானல், டோன் கன்ட்ரோல், எல்.இ.டி. (L.E.D.).
- தேவையில்லாத சப்தத்தை நீக்கி படம் மேலும் சீராக ஓடாமலிருக்கச் செய்ய பிரத்யேக ஆட்டோமேடிக் சாதனம்.
- மழைக் காலத்தில் 'ஸ்பார்க்' ஏதும் வராமலிருக்கக் கையாளப்பட்டுள்ள நவீன முறை.
- சென்னையிலிருந்து 160 கி.மீ. தொலைவில் வசிப்பவர்களும் உபயோகிக்க பிரத்யேக 'ஹை-கெய்ன்' செட்டுகள், பூஸ்டர்கள்.
- வார 7 நாட்களிலும் சிறந்த சர்வீஸ். சென்னையிலிருந்து 160 கி.மீ. தொலைவில் வசிப்பவர்களின் சௌகரியத்திற்காக காஞ்சீபுரத்திலும் ஒரு சர்வீஸ் சென்டர்.
- மின்சார செலவு — ஒரு 40 வாட் பல்பு எரிவதால் ஆகும் செலவே இதற்கும் ஆகிறது.

மொத்தத்தில் சாலிடெருக்கு நிகர் சாலிடெர் ஒன்றே.



**ஹை-பீம் எலக்ட்ரானிக்ஸ் பி. லிட்.**
சென்னை-600 020
சர்வீஸ் போன் : 412642

**காஞ்சீபுரம் சர்வீஸ் சென்டர்**
439, மகாத்மா காந்தி ரோடு
காஞ்சீபுரம். போன் : 2405

HE-236

# சாலிடெர்



# பொன்மனச் செம்மலும் பொன்விழா ஆண்டும்

## வித்துவான் வே. லட்சுமணன்

**10**

இயக்குநர் கே. சங்கர் சுறுசுறுப்பான 'டெக்னிஷியன்'. படப்பிடிப்பின்போது அவரிடம் தெளிவும் உற்சாகமும் உடன் பிறப்பாக இருக்கும். எப்பேர்ப்பட்ட பிரும்மாண்டமான காட்சிகளையும் அநாயாசமாகப் படமெடுப்பதில் அதிசூரர். மக்கள் திலகம் அவர்களை நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்ளத் தெரிந்த இயக்குநர்களில் குறிப்பிடத் தக்கவர்.

அதனால்தான் சென்னையிலிருந்து ஏறத்தாழ முந்நூற்று ஐம்பது மைல் தொலைவில் உள்ள கலசாபுரம் கிராமத்திலும், மற்றும் ஜமண்குண்டி, சக்லேஷ்பூர், பாபாபுடான் கரே, தருமஸ்தலா முதலான இடங்களிலும் தொடர்ந்து நாற்பது நாட்கள் படப்பிடிப்பு நடத்தி, பல்லாண்டு வாழ்க படத்தின் பெரும் பகுதியை முடிக்க முடிந்தது.

இதன் பிறகு நீதிக்குத் தலைவணங்கு, உழைக்கும் கரங்கள், ஊருக்கு உழைப்பவன், நவரத்தினம், இன்று போல் என்றும் வாழ்க, மீனவ நண்பன், மதுரையை மீட்ட சுந்தர பாண்டியன் ஆகிய படங்கள் மக்கள் திலகத்தின் சிறப்பு முத்திரைகளுடன் வெளிவந்தன. இந்தப் படங்கள் எல்லாவற்றிலுமே உன்னதமான கருத்துக்களும் பாடல்களும் சிறப்பாக அமைந்திருந்தன. மேலும் குறிப்பாக மக்கள் திலகம் அவர்கள் அற்புதமான பல குணச்சித்திரங்களை நடிப்பின் மூலம் வெளிப்படுத்தியிருந்தார்.

1978ல் மதுரையை மீட்ட சுந்தர பாண்டியன் வெளிவந்த பிறகு அடுத்து மக்கள் திலகம் நடித்து எந்தப் படமும் வெளிவரச் சந்தர்ப்பமில்லை.

நாற்பது ஆண்டுகளுக்கு மேல் தொடர்ந்து சினிமா உலகில் நடித்து வந்த திரு எம்.ஜி. ஆர். அவர்களை அரசியல் உலகமானது தனக்கு மட்டுமே அவர் சொந்தமெனக் கூறி முழுமையாக சுவீகாரம் செய்து கொண்டு விட்டது.

எப்போதுமே திரு எம். ஜி. ஆர். அவர்களுக்கு சினிமா, அரசியல் ஆகிய இரண்டும் இரண்டு கண்களாக இருந்து வந்தன. கலைத் துறையில் அவர் முழு நேரம் ஈடுபட்டபோது கூட, அரசியல் தனக்கென்று ஒரு கணிசமான நேரத்தை அவரிடமிருந்து பெற்றுக் கொண்டிருந்தது.

சினிமா என்கிற கலைத் துறையில் பணியாற்றும்போது அரசியலில் தாம் சார்ந்திருந்த கட்சியின் நலனுக்காக மக்கள் திலகம் அரும்பாடு படுவதும், அதற்காகப் பெரும் பகுதி நேரத்தை ஒதுக்குவதும் இயற்கைதான். இதற்குக் கலைத் துறை இடமளிக்க வாய்ப்பிருந்தது.

ஆனால் அரசியலில் ஆற்றி வந்த பணிகளுக்குப் பரிசாகவும் காணிக்கையாகவும் மக்கள் அவர் சிரத்தில் மணிக் கிரீடத்தைச் சூட்டிய பிறகு அவரால் கலைத் துறைக்குள் மறுபடியும் புகுந்து வழக்கம் போல் நடிக்க இடம் இல்லாமற் போய்விட்டது.

அரசியல் என்பது கட்சி ரீதியாகப் பார்க்கும்போது வேறு: ஆட்சிப் பொறுப்பை நிர்வகிப்பது என்கிற ரீதியில் பார்க்கும்போது வேறு.

கட்சியில் பணியாற்றும்போது எந்தக் கட்டுப்பாடும் இருக்க நியாயமில்லை. மேலும் தான் இருக்கும் இடம் எதுவானாலும் அங்கிருந்து கொண்டு கட்சிப் பணி ஆற்ற முடியும்.

ஆனல் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற பிறகு அந்த நிலைமை மாறுபட்டதில் வியப்பில்லை.

இன்னமும் கூட அவரது இரத்தத்தில் கலையார்வம்தான் முழுக்க முழுக்க நிறைந்திருக்கிறது என்பதை அறிய முடிகிறது. ஏழு வயதுச் சிறுவனாக இருந்தபோது புகுந்த ஆலயம் அல்லவா கலை! எப்படி அதன் மீது பற்றும் பாசமும் இல்லாமல் போக முடியும்?

ஆனாலும் மக்கள் தீர்ப்புப்படி அவர் நாடாளும் பொறுப்பை ஏற்றுக்கொண்டு, தமிழகத்தில் ஏற்கெனவே தாம் செய்து வந்த பணிகளுக்கெல்லாம் நற்சான்றுச் சாஸனமாக அவருக்கு எழுதித் தரப்பட்ட ஆட்சி பீடத்தில் இருந்து கொண்டு, கலைத் துறைக்கு மட்டுமல்லாமல் ஏனைய எல்லாத் துறைகளுக்கும் ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதைப் பார்க்கிறோம்.

திரை உலகம் பொன் விழா காணும் இந்த ஆண்டில் மக்கள் திலகம் திரைப்படம்

எதிலும் நடிக்கவில்லை என்றாலும், அவர் நடித்து ஏற்கனவே வெளிவந்த படங்கள் மீண்டும் திரையிடப்பட்டுத் திரண்டுவரும் மக்களால் பார்க்கப்படுகின்றன.

இது ஒரு பெரிய அதிசயம். எந்த விதி யோகஸ்தரை வேண்டுமானாலும் கேட்டுப் பார்க்கலாம்; எந்தத் திரைப் படக் கொட்டகைக்காரரையும் கேட்டுப் பார்க்கலாம்.

பல ஆண்டுகள் முன் திரு எம். ஜி. ஆர். அவர்கள் நடித்து வெளிவந்த படங்கள் எல்லாம் கூட இன்று புதுப் படம் போல் வெளியிடப்பட்டுக் கொட்டகை நிறைந்த வசூலைப் பெறுகின்றன. இது உண்மையான புள்ளி விவரச் செய்தி.

இதில் இன்னொரு முக்கியத் தகவலும் தரப்பட வேண்டியிருக்கிறது. ஏற்கனவே பெருமளவுக்கு வெற்றி பெற்ற மக்கள் திலகம் அவர்களின் படங்கள் இப்போது ஓட்டப்பட்டு மகத்தான வசூலைப் பெறுவதென்பது ஒருபுறம் இருக்கட்டும். ஏற்கனவே வெளிவந்து அதிக அளவு வெற்றி பெறாத சில படங்கள் கூடப் பலராலும் இன்று பார்க்கப்பட்டுப் பாராட்டப்பட்டு நிறைய வசூலைப் பெற்றுத் தருகின்றன என்றால், இது விந்தையிலும் விந்தை அல்லவா?

திரைப்பட வெற்றி என்பது அது வெளியாகும் நேரத்தைப் பொறுத்தது.

அன்று, அந்த நேரத்துச் சூழ்நிலையில், அந்தக் கருத்துக்கள் நிறைவாக வரவேற்கப்படவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். இன்று அதே கருத்துக்கள் வரவேற்கப்படுகின்றன அல்லவா? அது காலத்தின் இயல்பு.

மேலும் மக்கள் திலகம், அவர்களின் படங்களில் கருத்துக்கள் எல்லாமே காலங் கடந்தும்கூட நிலைத்து நிற்கும் ஆற்றல் பெற்றவை என்பது உண்மை.

மக்கள் திலகம் நடித்துப் புதுப் புதுப் படங்கள் வெளிவந்து கொண்டிருந்த காலங்களில் கூட அவருடைய பழைய படங்கள் வெளிவந்து சக்கைப்போடுபோட்டது உண்டு.

இவற்றிலிருந்து நாம் தெரிந்து கொள்ளக் கூடிய அரிய உண்மை, சீரிய கருத்துக்களுக்குப் பழைமை — புதுமை என்ற வேறுபாடு இல்லை என்பதே.

தமிழ்த் திரைப்படப் பொன் விழா ஆண்டில் நினைத்துப் பார்ப்பது மட்டுமல்லாமல் சிகரத்தில் இருத்திப் பார்க்க வேண்டிய சிறப்புக்கு உரியவர் திரு எம். ஜி. ஆர். என்று நான் சொன்னால் அதை யாரும் மிகைபடக் கூறியதாக எடுத்துக் கொள்ள மாட்டார்கள்.

தமிழ்ச் சமுதாய வளர்ச்சிக்கு எத்தனையோ மேலோர்கள் பலப் பல கோணங்களில் தொண்டாற்றி வந்திருக்கிறார்கள். 'திரைப்படம்' என்கிற கோணத்தில் சமுதாய வளர்ச்சிக்கும், தேசாபிமானத்துக்கும் வித்தையூன்றிப் பெரும் பணியாற்றியவர்களில் குறிப்பிடத் தக்கவர் பொன் மனச் செம்மல்.

படங்களில் அவர் வாய் மூலமாக வெளிவந்து ஒலிசெய்து, உள்ளத்தை ஈர்த்த பாடல்களுள் ஒன்று:

''நல்ல நல்ல பிள்ளைகளை நம்பி—
இந்த நாடே இருக்குது தம்பி!
சின்னஞ்சிறு கைகளை நம்பி —
ஒரு சரித்திரம் இருக்குது தம்பி!
தவறு என்பது தவறிச் செய்வது!
தப்பு என்பது தெரிந்து செய்வது!
தவறு செய்தவன் திருந்தப் பார்க்கணும்!
தப்பைச் செய்தவன் வருந்தியாகணும்...!!

படம்: பெற்றால்தான் பிள்ளையா?

மிகப் பெரிய தத்துவத்தை எளிய சொற்களில் தெரிவிக்கிறார் திரு எம். ஜி. ஆர். இயற்றியவர் கவிஞர் வாலி.

இதேபோல் எத்தனை எத்தனை கருத்தாழமும் சொல் எளிமையும் மிக்க பாடல்கள்! கவர்ச்சிகரமான உரையாடல்களில் எத்துணை புரட்சிகரமான கருத்துக்கள்! எல்லாமாகச் சேர்ந்து சமுதாயத்திலும் அரசியலிலும் ஏற்படுத்திய ஆரோக்கியமான விளைவுகள்தாம் எத்தனை எத்தனை!

கல்வி அறிவு அதிகம் வளராத தேசத்தில் சினிமாவின் பாதிப்பு பாமர மக்களிடையே மிக அதிகம். அதை நன்றாகப் புரிந்துகொண்டு அந்தச் சாதனத்தைத் தேச நலனுக்கு உகந்த விதத்தில், காண்பவர் உள்ளங்களில் உயர்ந்த எண்ணங்கள் வளரும் விதத்தில் பயன்படுத்திய பொன்மனச் செம்மலை, பொன்விழா ஆண்டில் மட்டுமல்ல, திரை உலகின் நூற்றாண்டு விழாவின் போதும் அதற்குப் பின்னரும் கூட சரித்திரம் போற்றும்.






"சூலகிரி, துங்கக்கிரி, உயர் குன்றக்குடி" என அருணகிரியார் சிறப்பித்துக் கூறும் இம் மலைத்தலம் இராமநாதபுரம் மாவட்டத்தில் செட்டிநாட்டுப் பகுதியில் காரைக்குடியிலிருந்து 5 கல் தொலைவிலும், திருப்புத்தூரிலிருந்து 8 கல் தொலைவிலும் உள்ளது. மதுரை –தேவகோட்டைப் பெருஞ்சாலையில் இருப்பதால் பஸ் வசதி உண்டு. காரைக்குடி ரயில் நிலையத்திலிருந்து முப்பதே நிமிடத்தில் குன்றக்குடியை அடைந்துவிடலாம்.

சிறிய அழகிய கிராமத்தின் நடுவே ஓங்கி நிற்கும் குன்றின் மேல் அமைந்த முருகப் பெருமானின் திருக்கோயிலை, நான்கு திசைகளிலும் '10 கல் தொலைவிலிருந்தே தரிசிக்க முடியும். வடக்கே உயர்ந்து, தென்புறம் மயிலின் தோகையைப் போல் ஒழுங்காகச் சரிந்துள்ள குன்றின் எழிலார்ந்த தோற்றம், இத்திருத்தலத்துக்குத் 'தோகைக் குன்றம்' என்பதொரு பெயரை ஈட்டித் தந்துள்ளது. மலைக் கோயிலைச் சுற்றிலும், வலம் வருவதற்காக அகன்ற, நீண்ட, தேரோடும் நான்கு வீதிகள் உள்ளன. வீதிகளை ஒட்டி நான்கு புறங்களிலும் அமைந்த அழகிய திருக்குளங்கள், 'வளமிகு குன்ற நகர்' என அருணகிரிநாதரைப் பாட வைத்துள்ளன.

மலையடிவாரத்தில் உள்ள தோகையடி விநாயகரைத் தோப்புக் கரணம் போட்டுத் தரிசித்துக் கொண்டு மலைமேல் ஏறுகிறோம். வானுற நிமிர்ந்து நிற்கும் மலையின்மேல், தென்முகம் நோக்கிய இராஜ கோபுரத்துடன் கம்பீரமாகத் திருக்கோயில் அமைந்துள்ளது. ஐம்பத்தாறு மீட்டர் உயரத்தில், ஆறே முக்கால் ஏக்கர் பரப்பளவுள்ள திருக்கோயிலை அடைவதற்கு முன், பக்தர்களால் எழுப்பப்பட்ட பல மண்டபங்களைக் காண்கிறோம். மண்டபங்களைக் கடந்து சென்

குன்றக்குடி. பெரிய பெருமான்

## திருத்தலம் கண்டேன்



⌘ குன்றக்குடி மலைமேவு திருக்கோயில்

⌘ குன்றக்குடி முருகப் பெருமான் மூலத் திருவுருவம்

றதும் இடும்பன் கோயில் வருகிறது. இடும்பனைத் தரிசித்துவிட்டு மேலே செல்லும் படிக்கட்டுக்கு மேற்புறம் வல்லப கணபதி வீற்றிருக்கிறார். மலை மேல் ஏறி வந்ததால் மூச்சுக் காற்று உள்ளும் புறமும் வேகமாக ஓட, மீண்டும் தோப்புக் கரணம்! திருக்கோயிலின் துரைராஜு மண்டபத்தை அடைந்ததும், சுகமான இளங் காற்று புனித நலத்தை ஊட்டுவிக்கிறது!

திருக்கோயிலின் ராஜகோபுர வாயிலைக் கடந்து இடப் பக்கம் திரும்பியதும் மூலவர் கோயில் திருச்சுற்றுத் தொடங்குகிறது. திருச்சுற்றில் பல மூர்த்திகளைத் தரிசித்து, நவக்கிரகங்களை வலம் வந்து வணங்கி, கொடி மரத்தை நெருங்கிக் கருவறையை நோக்குகிறோம். கொடி மரத்தின் உச்சியில் விளங்கும் சிறு மணிகள், 'கிண் கிணி' நாதத்தை மெல்லிதாக எழுப்பி, நம்மைக் கிறங்க வைக்கின்றன! இறங்கி வந்தருளும் ஆயத்த நிலையில், மயில் வாகனத்தில், ஆறு திருமுகங்களும், பன்னிரு திருக் கரங்களும் திகழ்ந்திட எழுந்தருளியிருக்கும் முருகப் பெருமானைத் தரிசிக்கிறோம். பெருங் கருணை திருமுகங்கள், நம் கண்களின் வழி நுழைந்த அந்தக் கணமே 'நம்மை இழக்கும் நலம்' நம்மை வந்தடைவதை நம்மால் உணர முடிகிறது.

அருகில் சென்று தரிசிக்க ஆசை மேலிடுகிறது. கருவறைக்கருகே உள்ள மயில் மண்டபத்தை அடைகிறோம். பெருமானின்

# பட்டம் பதவி

பட்டம் பதவி

ஒரு சின்னப் பொய் என்னென்ன குழப்பங்களையும் மனக் கஷ்டங்களையும் ஏற்படுத்தும் என்பதைச் சித்திரிக்கும் ஹேமா ஆனந்ததீர்த்தனின் கதை. இயக்கியது பூர்வாசிரமத்தில் எம். ஏ. காஜாவாக இருந்து இப்போது திருமுருகனாய் அவதரித்திருப்பவர். இடைவேளை வரை ஒரே சிரிப்பும், கலகலப்புமாய்ப் போகும் படம், பிறகு ஒரே பிசுபிசுப்பு. உட்கார முடிவதில்லை.

எஸ். எஸ். ஆர். ராஜேந்திர குமார் ரொம்ப தன்னம்பிக்கையோடு நடிக்கிறார். டைட்டான சட்டைகளில் வரும்போது ஏனோ மு. க. முத்து ஞாபகம் வருகிறது. இடைவேளைக்குப் பிறகு காணாமல் போய், கடைசிக் காட்சியில் வருகிறார். டாம்பீகமும், பிடிவாதமுமாய் அமர்க்களப்படுத்தும் கதாநாயகியாய் உஷா நல்ல செலக்ஷன். மீண்டும் டெல்லி கணேஷ்—சுமித்ரா ஜோடி அப்பா அம்மாவாய் தோன்றுகிறார்கள். அடுத்ததில் தாத்தா பாட்டியாய் வந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. சுருளி இல்லாத குறை தீர்த்து வைக்க, கல்லா பெட்டியும், மகேந்திரனும் விரசக் காமடி செய்கிறார்கள். தங்கவேலுவும் மனோரமாவும் 'கல்யாணப் பரிசு' பைரவன் கதையை மீண்டும் நடித்துக் காட்டுகிறார்கள். பெரிய ஜோக் என்னவென்றால் முரளியிடம், கவிதா (ராணி பத்மினி) 'நானே உங்களைக் கல்யாணம் பண்ணியிருப்பேன்' என்று சொல்ல, முரளி திகைக்க ஒரு ஜிகினா உடை கனவு டூயட் மலர்கிறது. டூயட் முடிந்தவுடன் அம்போ என்று போன ராணி பத்மினி சத்தியமாய்ப் பிறகு தலைகாட்டுவதே யில்லை. அடுத்த படத்தில்தான் பார்க்க வேண்டும்.

''நான் வெறும் ஃபோர்த் ஃபார்ம்தான்'' என்று முரளி கூறுவதாய் ஒரு வசனம் வருகிறது. ''கொஞ்சம் இந்தக் காலத்துக்கு வாங்களேன் வியட்நாம் வீடு சுந்தரம் சார்!'' பியூன் மட்டுமல்ல, பாங்க் மானேஜரும், புரபஸரும் கூட தங்கள் தகுதிக்கு மேற்பட்ட மாளிகைகளில்தான் வசிக்கிறார்கள். பெரிய புரொபஸர் 'டிவோர்'ஸை 'டைவர்ஸ்' என்று உச்சரிக்கிறார்.

அதிசயம் ஆனால் உண்மை! படத்தில் ஒரு சண்டைக் காட்சி கூடக் கிடையாது. அதற்காக மட்டும் டைரக்டரைப் பாராட்டலாம். பாடல்களையும் வெட்டியிருந்தால் இன்னும் பாராட்டியிருக்கலாம். எம்.எஸ்.வி.யின் பின்னணி இசையும் பாழுல்தான்.

படத்தில் தங்கவேலு அடிக்கடி ஒரு வார்த்தையை உபயோகிக்கிறார் — ''அடச் சே!'' —சிந்து — ஜீவா



பட்டம் பதவி



# Agfa Photography at f/5·6



The Agfa Isoly II takes perfect snapshots in dim, soft light. Open the aperture wide to f/5.6 to get as much light as possible to the film. Set the shutter at 1/30 second, slow enough to allow correct image registration. Shoot from a distance of 1,83 m. with the Isoly firmly on a tripod. Use slow film for greater sharpness— 125 ASA. The result? A perfect picture in low light.

The Agfa Isoly II is a great all-round camera. You simply adjust settings, distance and film to freeze a sports scene forever, capture every detail, near or distant, of a landscape or get close enough to snap a leopard snarling!

The Agfa Isoly II is built to German specifications and undergoes over 100 exacting tests.

See this fine camera today at your friendly Agfa-Gevaert dealer.

**ISOLY-II**

*for professional results.*





AGFA-GEVAERT INDIA LIMITED

Registered Office: Merchant Chamber, 41 New Marine Lines, Bombay 400 020 • Branches: Bombay New Delhi • Calcutta • Madras • ® Registered Trademarks of Agfa-Gevaert Antwerp/Leverkusen

**1st for everything in photographics**

SIMOES/AGIL/1A/81

வலப்பக்கத்தில் தனி மயில் வாகனத்தில் வள்ளியம்மையும், இடப் பக்கத்தில் தனி மயில் வாகனத்தில் தெய்வயானையும் எழுந்தருளி இருப்பதைக் கண்டு வணங்குகிறோம். மயில் வாகனமும், இரு வாசியும், மூல மூர்த்தியாகிய பெருமானின் திருவுருவமும் ஒரே சிலையாக அமைந்துள்ளன.

வழிபாடு முடிந்து திரும்புகிறபோது, தல வரலாற்று நூலைப் பெற்றுக் கொண்டு துரை ராஜு மண்டபத்தில் அமர்கிறோம்.

குன்றக்குடித் திருத்தலம் – மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூவகையாலும் சிறந்து விளங்குகிறது. புராண வரலாறும், சரித்திரம் காட்டும் கல்வெட்டுக்களும், தமிழ் மக்களின் கலை உணர்வை எடுத்துக் கூறும் எழில் சிற்பங்களும், நோய் நீக்கம், துன்ப நீக்கம் மகப் பேறு முதலிய பேறுகளை வழங்கிய அருட் செயல்களும் நிறைந்து விளங்குவதை அறிந்து மகிழ்கிறோம். கண்ணபிரான், நான்முகன், இந்திரன், வசிட்டர், விசுவாமித்திரர், நாரதர், சூரியன், மன்மதன் முதலியோர் வழிபட்டுப் பேறடைந்த செய்திகளை அறியும் போது நாமும் சற்றே நெஞ்சை உயர்த்திக் கொள்கிறோம். அவர்களது வரிசையிலே இப்போது நாமும் இடம் பெற்று விட்டோமே?

அருணகிரிநாதரால் சிறப்பித்துப் பாடப் பெற்ற இத்திருத்தலம், பெரும் புலவர்களும், மெய்யன்பர்களும் இயற்றிய அளவிடற்கரிய பதிகங்களையும் பிரபந்தங்களையும் தமிழ் மொழியிலும் வட மொழியிலும் புகழ் நூல்களாகப் பெற்றுத் திகழ்கிறது.

மலையின் தென்மேற்கு அடிவாரச் சரிவுப் பாறையில் மூன்று குடைவரைக் கோயில்கள் ஒரே வரிசையில் அமைந்துள்ளன. இவைகளுக்கு எதிரே கற்றளியாகத் தோற்றுநாதர் கோயிலெனும் சிவன் கோவிலொன்று பேரெழிலுடன் திகழ்கிறது. இக்கற்றளி 'மாளிக்கரம்' என அழைக்கப்பெற்று வந்துள்ளது. சிற்பி, குடைவரைகளை உருவாக்குகிறபோது, கருவறையுள் அமைந்த இயற்கைப் பாறையிலேயே சிவலிங்கங்களை அமைத்திருப்பது வியப்புக்குரியது. மலையின் மேற்குப் பகுதி 'ஞானியர் மலை' எனக் குறிப்பிடப்படுகிறது. அம்மலைப் பகுதியில் கற் படுக்கைகளும், பிராமிக் கல்வெட்டுகளும் உள்ள அமணபாழி தென்படுகிறது. .

குன்றக்குடி முருகப் பெருமானைக் குல தெய்வமாகக் கொண்டவர்கள் நகரத்தார் பெருமக்கள். 'செட்டி முருகன்' என்ற பெயரைக் கொண்டவனல்லவா முருகப் பெருமான்! நகரத்தார் பெருமக்கள் இத் திருத்தலத்தைக் கொண்டே, தாங்கள் வாழ்கிற ஊர்களின் திசையைக் குறிப்பர்! தேரோடும் நான்கு வீதிகளிலும் இரு மடங்கள், அறச் சத்திரங்கள் அமைத்துத் தர்ம பரிபாலனம் நடத்தி வருகிற நகரத்தார்கள் திருப்பணிகள் செய்வித்தும், பெருமானுக்குத் திருவாபரணங்கள் வழங்கியும் பேறு பெற்று உள்ளனர்.

திருக்கோயிலைக் காத்துப் புரந்து வருகிறது குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம். 45வது குரு மூர்த்தியாக இப்போது வீற்றிருப்பவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் எனத் தமிழகம் போற்றும் திருவருள்திரு தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமிகள்.

மாதந்தோறும் பெருமானுக்கு விழாக் கொண்டாடி வரினும், பங்குனி உத்தரப் பெருவிழா – பல லட்சக்கணக்கான மக்கள் குழுமி, பல்லாயிரக் கணக்கான காவடிகள் செலுத்தும் புகழ் பெற்ற விழாவாக அமைந்திருக்கிறது. அக்கினிக் காவடி, சர்ப்பக் காவடி, சர்க்கரைக் காவடி, வேல் காவடி, தேர்க் காவடி எனப் பக்தர்களால் கொண்டு செலுத்தப்படும் காவடிகள் வகை வகையாக அமைகின்றன. காவடிகளின் எல்லையில்லாத அளவு கருதி "கழுதை தப்பினால் குட்டிச் சுவர்! காவடி தப்பினால் குன்றக்குடி" எனவொரு பழமொழியே ஏற்பட்டு விட்டது!

'குன்னக்குடி' என்பதும் இத் திருத் தலத்தையே குறிக்குமென்ற செய்தியைக் கேட்கையில் செவிகளில் வயலின் நாதம் ரீங்காரமிடுகிறது! மலையில் ஏறுகிறபோது இருந்த சிரமம், இறங்குகிறபோது இல்லையே? மலையில் மட்டுமா, மானுட வாழ்விலும் அப்படித்தானே! வாழ்வில் ஏறுமுகம் காண, ஆறுமுகப்பெருமான் அருள் பாலிப்பானென்ற பெரு நம்பிக்கையோடு அடிவாரத்தை அடைகிறோம்.



அன்று ஞாயிற்றுக்கிழமை. பார்வதி தன் வக்கீல் கோவிந்தராஜாச் சாரியையும், டாக்டர் ஆனந்தையும் பகல் நேர விருந்துக்கு அழைத்திருந்தாள். அவளால் நடக்க முடியாது. பத்தடி நகர்ந்தாலே மூச்சு வாங்க ஆரம்பித்து விடும். அதனால் அவளுக்கு உதவியாக இருப்பது வில்சேர் தான். மாலை நேரங்களில் ப்ரியா அவளைத் தோட்டத்துக்கு அழைத்துச் செல்வாள். இரண்டு மணி நேரம் வானத்தில் பறக்கும் பறவைகள் சாலையில் செல்லும் ஆடு மாடுகள்... பலவிதமான மனிதர்கள் இதை யெல்லாம் ரசிப்பாள். அம்பாலா, மீரட், டேராடூன்போன்ற இடங்களைப் பற்றிய கதைகள், கிசுகிசுக்கள்—இப்படிச் சற்று நேரம்....

டின்னர் டேபிளைச் சுற்றி டாக்டர் ஆனந்த், கோவிந்தராஜாச்சாரி, ப்ரியா, பார்வதிஎல்லோரும் உட்கார்ந்திருந்தார்கள். மேசையின் மேல் அலங்கார ப்ளவர்வாஸ்கள் வெண்கல டின்னர் காங்... இப்படிச் சில அழகுப் பொருள்கள். பார்வதி கையிலிருந்த ஃபோர்க் தட்டிலிருந்த வேகவைத்த காய்கறிகளைக் குத்திக் கிளறிக் கொண்டிருந்தது. அவள் எப்போதுமே ஃபோர்க் ஸ்பூனுடனே தான் சாப்பிடுவாள். அப்படிச் சாப்பிடாதவர்களைக் கேலியும் செய்வாள். வழக்கமாக விஜிடபுள் சூப். வேகவைத்த காய்கறிகள் ஒரு வாய் சாதம். ஒரு பழம்... வாரம் நான்கு முறை வேகவைத்த கோழிக் கறி. அன்று வக்கில் சாப்பிட வந்ததினால் எல்லாமே சைவந்தான். உருளைக் கிழங்கு பொரியலில் வெங்காயம் கூடச் சேர்க்கப்படவில்லை.



# வருவான் ராஜகுமாரன்!

ராண்டார் கை

"மிஸ்டர் சாரி", பார்வதி ஒரு காளிஃபிளவர் துண்டை வாயில் போட்டுக்கொண்டாள். "ரொம்ப நாள் கழிச்சு நான் இன்னிக்குத்தான் ஹாப்பியா இருக்கேன். என் உயிலெ சைன் பண்ண உடனே, ஒரு பெரிய பாரத்தை இறக்கி வெச்சமாதிரி ஒரு ஃபீலிங். எனக்கு என்னமோ இந்த நேரத்துலே ஒண்ணு தோணுது. கிரிஷ் உடனே திரும்பி வருவான்னு. நீங்க வேணா பாருங்க, அது நிச்சயமா நடக்கப் போகுது." கோவிந்தராஜாச்சாரி வாயை மென்று கொண்டே சிரித்தார்.

"மிஸ்டர் சாரி,ஒங்கசிரிப்பைப் பாத்தா நான் சொல்றதை நீங்க நம்பலேன்னு தெரியுது. பைத்தியக்காரி ஏதோ கன்னா பின்னான்னு உளர்றான்னு நெனைக்கிறீங்க இல்லையா.... நாளைக்கு கிரிஷ் திரும்பி வந்துடுவான். அதுக்கப்பறம் ஒங்களுக்குப் புரியும். நான் பைத்தியமா இல்லையான்னு."

டாக்டர் ஆனந்த் உருளைக் கிழங்குப் பொரியலைத் தம் தட்டில் எடுத்துப் போட்டுக் கொண்டே பேசத் தொடங்கினார்: "மேடம் ஒங்களைப் பத்தி அப்படி யாரும் நெனைக்கலே... நெனைக்க மாட்டாங்க..... மிஸ்டர் சாரி உள்பட நாங்க எல்லோருமே கிரிஷ் சீக்கிரம் திரும்பி வருவார்னுதான் எதிர்பார்த்துக்கிட்டிருக்கோம்."

டாக்டர் ஆனந்தின் வார்த்தைகள் பார்வதியைச் சந்தோஷத்தால் தத்தளிக்கச் செய்தன.

ப்ரியா கண்களைத் திறந்தாள். இன்னும் தேங்கியிருந்த தூக்கத்தைத் தன் விரல்களால் துடைத்தாள். வாசலில் காலிங் பெல் அடித்தது போல் ஓர் உணர்ச்சி. சிறு வயதிலிருந்தே அவளுக்குத் தூக்க மயக்கமே லேசில் கலையாது. தூக்கம் கலைந்தவுடன் அரை மணி நேரமாவது படுக்கையில் புரள வேண்டுமென்ற ஆசை அவளுக்கு. ஆனால் அவள் வளர்ந்த சூழ்நிலையில் அந்த ஆசை அவள் விரும்பிய அளவுக்கு நிறைவேற வில்லை. கொட்டாவி விட்டுக் கொண்டே தலையைத் தூக்கிப் பார்த்தாள். ஜன்னலின் கண்ணாடி வழியாக வானம் இன்னும் இருட்டின் அணைப்பிலேயே சங்கமமாகிக் கிடந்தது தெரிந்தது. பறவைகளின் பூபாளம் இன்னும் ஒலிக்க ஆரம்பிக்கவில்லை. அந்த நேரத்தில் காலிங் பெல் அடிப்பதாவது. வெறும் பிரமைதான். தனக்குள் சிரித்துக் கொண்டாள்.

டிங்....!.....டாங்! ப்ரியா கண்களை அகலத் திறந்தாள்.

டிங்! டாங்....! ஆம் அது மணி ஓசைதான். பிரமையல்ல. வேகமாக எழுந்து உட்கார்ந்தாள். தன் ஆடையைச் சரி செய்து கொண்டாள். கண்களின் ஓரங்களைத் துடைத்துக் கொண்டாள். முடியைச் சீராக்கினாள்.

டிங் டாங்! டிங்டாங்!

அவசர அவசரமாக வாசலுக்கு ஓடினாள். வெளி வராந்தாவின் விளக்கைப் போட்டு விட்டுக் கதவைத் திறந்தாள். வாசற்படியில் வாட்ட சாட்டமான, உயரமான ஒருத்தன் நின்று கொண்டிருந்தான். அவன் கையில் ஒரு சிகப்புப் பெட்டி. அருகில் தரையில் இரண்டு சிறிய தகடுப் பெட்டிகள்.

"ஹலோ" அவன் குரலில் ஆண்மை நிறைந்திருந்தது.

"எஸ் ப்ளீஸ்"

"இது மிஸஸ் மல்லிக் வீடுதானே? பார்வதி மல்லிக்?"

"எஸ்....நீங்க....நீங்க...."

ப்ரியாவின் இருதயம் வேகமாக அடிக்கத் தொடங்கியது.

"நான்தான் கிரிஷ்... கிரிஷ் மல்லிக்!... பார்வதியோட ஸன்!"

"கிரிஷ்!.... ஓ காட்.... மம்மி....மம்மி... மமமமமமமம்மி! அவர் வந்துட்டாரும்மா. கிரிஷ்.... ஆமா ஒங்க மகன்தான்... வந்தாச்சு...."

ப்ரியா தன்னை மறந்து உரக்கக் கத்திக் கொண்டே உள்ளே துள்ளி ஓடினாள், கதவை நன்றாகத் திறக்காமலேயே.

கிரிஷ் கட்டிலில் பார்வதியின் அருகில் உட்கார்ந்திருந்தான். அவன் அவள் கைகளைப் பிடித்துக்கொண்டு வெகு நேரம் அழுது கொண்டிருந்தான். அவன்உள்ளத்தில்அடங்கியிருந்த ஆசா பாசங்கள், உணர்ச்சிக் கோளங்கள் கண்ணீர் வடிவாகக் குமுறிக் கொண்டு வெளியே வந்தன.

பார்வதியும் கிரிஷும் உணர்ச்சிகளைப் பரிமாறிக் கொண்டிருக்கும் நேரத்தில் ப்ரியா அவனுக்காகச் சமையல் அறையில் காப்பி தயார் செய்து கொண்டிருந்தாள். அவள் கைகளில் நடுக்கம். கிரிஷ் உயிருடன் திரும்பி வருவான் என்று அவள் நம்பவில்லை. ஆனால் இப்போது? அவள் மார்பு வேகமாக அடித்துக்கொண்டது...

''மம்மி.... அந்தப் பொண்ணு யாரு?'' காப்பியைச் சாப்பிட்டுக் கொண்டே கிரிஷ் கேட்டான். பார்வதியின் அழுகை சற்று ஓய்ந்து இருந்தது. அவள் கைகள் கிரிஷின் முதுகை வருடிக் கொண்டிருந்தன.

''என்ன ஸ்டுபிட் கொஸ்சன் இது. அவதாண்டா ப்ரியா. தங்கமான பொண்ணு. இந்த நாள்லே இந்த மாதிரிப் பொண்ணைப் பார்க்க முடியாது. ஹோம் ஆஃப் எ கேர்ள். எனக்குத் துணையா வந்தா. எனக்கு மருமகளா மாறப் போறா!''

கிரிஷ் நிமிர்ந்து உட்கார்ந்தான். அவன் புருவங்கள் ஆச்சரியக் குறிகளாக எழுந்து நின்றன.

''என்னம்மா அது என்ன சொல்றே நீ?''

''மெதுவாப்பா. எனக்கு ஒண்ணும் காது செவிடு இல்லே! ப்ரியா உன்னோட ஒய்ஃப் ஆகப் போறா!''

''என் ஒய்ஃபா?''

''ஆமாண்டா. ஆமாம். ஒய்ஃப்தான். பிரட்டுலே 'பீபி'ன்னு சொல்லுவாங்க. அதா வந்து மிஸஸ் ப்ரியா மல்லிக். அதான் இவளோட புதுப் பேரு. இன்னும் கொஞ்ச நாள்ள.''

''என்ன மம்மி, எனக்கு அந்தப் பொண்ணு யாரு என்னன்னே தெரியாது. இன்னிக்குக் காலமேதான் மொதல். தடவை பார்த்தேன்.....''

''ஸ்டாப் இட்...கிரிஷ்.... ஸ்டாப் இட்.''

''பட், மம்மி....''

''நிறுத்துடா. பட்டுமில்லே கிட்டுமில்லே. ஒங்க டாடியே என்னைப் பார்த்த அரை மணியிலியே கல்யாணம் பண்ணிக்கிறேன்னு சொன்னாரு. அப்பவே அவரு பெரிய ஆர்மி ஆஃபீஸர். நீ என்னடா சின்னப் பையன்.''

''மம்மி, அந்தக் காலம் வேறே....''

பார்வதி அவன் காதைத் திருகினாள்.

''டேய்,காலம் எப்பவும் ஒண்ணுதாண்டா என்னைப் பொறுத்தவரையிலும், மல்லிக் ஃபேமிலி பொறுத்த வரையிலும் அது மாறவே மாறுதுடா... கிரிஷ் பையா இந்த வீட்லே நான் சொன்னதுதான் நடக்கும்... நடக்கணும்... ஒங்க டாடியே நான் குதின்னு குதிப்பாரு. நான் தும்முனா அவரு தம் மூக்கைத் தொடச்சிப்பாரு. அவரு ஆர்மி மேஜர். அவரே அப்படின்னா நீ என்னடா''

கிரிஷ் பதில் எதுவும் சொல்லாமல் சிரித்தான். அப்போது ப்ரியா ஒரு பெரிய வெள்ளித் தட்டில் காலைச் சிற்றுண்டியோடு உள்ளே நுழைந்தாள். பிரெட் டோஸ்ட், வெண்ணெய், மார்மலேட், சூடான காஃபி. ஆரஞ்சு ஜூஸ்... ஆறு வாழைப் பழங்கள்.

கிரிஷின் பார்வை அவளை எடை போட்டது. இருவரின் கண்கள் சில நொடிகள் ஒன்றோடொன்று ஒட்டிக் கொண்டு உறவாடின. ப்ரியாவின் கழுத்தில் லேசாகச் சூடு படர்ந்திருந்தது. வெள்ளித் தட்டைத் கட்டிலுக்கருகே இருந்த ஒரு சிறிய மேஜையின் மேல் வைத்தாள்.

''வெரி குட் ப்ரியா... பார்ரா கிரிஷ் எவ்வளவு ஃபைன் ப்ரக்ஃபாஸ்ட் என் டாடர் இன்லா தயார் பண்ணியிருக்கா பாரு.''

ப்ரியாவின் முகம் சிவந்தது.

''மிஸ்டர் கிரிஷ் ப்ரக்ஃபாஸ்ட் சாப்பிடுங்க.''

''தேங்க்யூ மிஸ் ப்ரியா!''

''டேய் டேய்என்ன நீங்கரெண்டு பேரும்... மிஸ்டர் கிரிஷ்.... மிஸ் ப்ரியா... தேங்க் யூல்லாம்... இதெல்லாம் எனக்குப் பிடிக்கலே. இன்னும் கொஞ்ச நாள்ள கல்யாணம் பண்ணிக்கப் போறவங்க இப்படியெல்லாமா பேசுவாங்க. ஷியர் நான்சென்ஸ்.''

''மம்மி, நம்ம டாக்டருக்கு இன்னும் விஷயத்தைச் சொல்லலியே... அவர் மார்



300 கிராம்
ரூ. 3·20

நீங்களே கணக்கிட்டு பாருங்கள்!

## ஒரு சாதாரண டிட்டர்ஜண்ட் சலவை கட்டியை விட எடையோ இரண்டு மடங்கு விலையோ சிலகாசுகள்தான் அதிகம்

# டோட்டல்

## நீலடிட்டர்ஜண்ட் சலவை பார்







சுலபமான
சலவைக்கு
5 சிறிய பகுதிகள்

உண்மையான முதல்
டிட்டர்ஜண்ட் பார்!
டோட்டல், நீல டிட்டர்ஜண்ட்
சலவைக் கட்டியின் அதிக
வெண்மையையும், சலவை
பார் சோப்பின் சௌகரியத்தையும்
கொடுக்கிறது.

சிக்கனமாக சலவை செய்ய இதை 5 சிறிய
பகுதிகளாக்கி உபயோகிக்கலாம்.
எடையோ இரண்டு மடங்கு
விலையோ சில காசுகள்தான் அதிகம்!
நீங்கள் 125 கிராம் எடையுள்ள சாதாரண டிட்டர்ஜண்ட்
கட்டியை என்ன விலைக்கு வாங்குகிறீர்கள்?
300 கிராமின் விலை ரூ. 3.20 என்றால் 250 கிராம் டோட்டலின்
விலை ரூ. 2.67 தான். அதாவது ஒரு சாதாரண சலவைக்
கட்டியைவிட எடையோ இரண்டு மடங்கு,
விலையோ சில காசுகள் தான் அதிகம்.

தமிழ் நாடு, பீஹார் மற்றும் ஆந்திர பிரதேஷ் மாநிலங்களில் மட்டும் கிடைக்கும்.

---

கர்நாடக சோப்ஸ் அண்டு டிட்டர்ஜெண்ட் லிமிடெட் அளிக்கும் தரமான தயாரிப்பு
விற்பனை செய்பவர்கள் : மைசூர் சேலஸ் இண்டர்நேஷனல் லிட்., பெங்களூர்.

MCA-TDB-51-Tam

ஸிங் ரெஸண்ட்ஸ்லெல்லாம் முடிச்சுட்டுத் திரும்பி வந்திருப்பாரே."

"ஆமாம். மறந்தே போச்சும்மா. உடனே ஃபோன் பண்ணு."

"மம்மி டாக்டர் ஆனந்த் யாரு?"

கிரிஷ் வெண்ணெயைச் சற்றுத் தாராள மாகவே ரொட்டியில் தடவிக் கொண்டு கேட்டான்.

"ஃபூல்... கிரிஷ். டாக்டர் ஆனந்த் நம்ம ஃபேமிலி டாக்டர் மட்டுமில்லே. சம் திங் மோர்... என்னமோ சொல்லுவாங்களே ஃபிரண்ட் பிலாஸஃபர், கெய்டுன்னு அதான் அவரு. கிரிஷ் நீ இங்கே வர்றதுக்கு அவர் தாண்டா காரணம். இந்த உலகம் இருக்கே, அந்த ப்ளேன் ஆக்ஸிடெண்டுலே நீ செத்துப் போயிட்டேன்னுதான் நம்பிடுத்து. நான் நம்பல்லே. அந்த டாக்டர்தான் என் நம் பிக்கை வீண் போகாமெ இருக்கப் பாடு பட்டார். அவரு ஒன்னைத் தேடிப் போகாத இடமே இல்லேப்பா. டெல்லி.... மீரட்... டாக்டர் ஆனந்த் மட்டும் இல்லேன்னு இன்னிக்கு ஒன்னைப் பார்த்திருக்கவே முடி யாது."

"மம்மி, அப்பேர்ப்பட்ட டாக்டர் ஆனந்தை நான் உடனே மீட் பண்ணணுமே."

ப்ரியா ஹாலில் ஃபோனைக் காதில் வைத் துக்கொண்டு நின்றிருந்தாள். அவள் மனத் திரையில் கிரிஷ் தோன்றினன். அவன் பார்வை.... ஆண்மை கலந்த குரல்... அவளை என்னமோ செய்தது.

"ஹலோ."

"ஹலோ டாக்டர் ஆனந்த் ஹியர்... யாரு?"

"டாக்டர், ப்ரியா பேசறேன் ஸார்... அவர் வந்துட்டார் டாக்டர்!"

"யாரு ப்ரியா யாரு?"

"அவர்தான் டாக்டர்...அவர்... கிரிஷ்!"

"கிரிஷா? வந்தாச்சா?"

"டாக்டர்.... டாக்டர்.... ஹலோ... ஹலோ....!"

டாக்டர் ஃபோனை வைத்து விட்டார். பாவம் டாக்டர் ஆனந்த் அவருக்குத் தான் எத்தனை சந்தோஷம். அவர் எடுத்துக் கொண்ட முயற்சிக்குப் பலன் கிடைத்து விட்டது. அதில் அவருக்கு எத்தனை மகிழ்ச்சி. போனை வைத்துவிட்டு ஹாலுக்குள் சென் ருள்.

டிங் டாங்! டிங்டாங்!

டாக்டர் ஆனந்த். ஆம் அவரேதான் அவர் காலிங் பெல்லை அழுத்தும் விதமே தனி. அது அவளுக்கு நன்ருகவே தெரியும். அட அதற்குள் வந்து விட்டாரே!

"ஹலோ! ப்ரியா கங்கிராசுலேஷன்ஸ்."

கதவைத் திறந்த உடனே டாக்டர் ஆனந்த் ப்ரியாவின் தோளைத் தட்டிக் கொண்டே உள்ளே நுழைந்தார். அவர் நடக்கவில்லை. ஓடினுர்!

"டாக்டர்! திஸ் ஈஸ் மை ஸன் கிரிஷ்... கிரிஷ் மல்லிக்... கிரிஷ் இவர்தாம்ப்பா டாக் டர் ஆனந்த். நான் சொன்னேனே" பார் வதி இருவரையும் அறிமுகம் செய்து வைத் தாள். இருவரும் கை குலுக்கி மகிழ்ந்தார்கள்.

சுயேச்சையாளர்:



தொகுப்பு: சலன்

"டாக்டர் ஸோ க்லாட் டு மீட் யூ. எங்கம்மா நான் வந்ததிலேருந்தே ஒங்களைப் பத்தித்தான் பேசிக்கிட்டிருக்காங்க. நீங்க செஞ்சதுக்கு ரொம்ப தேங்க்ஸ் டாக்டர்." கிரிஷ் டாக்டரின் கைகளைத் தன் கண்களில் ஒற்றிக்கொண்டான்.

"வெல் கம் கிரிஷ் வெல் கம். ஒங்க அம்மா வோட நம்பிக்கை, எங்க எஃபர்ட்ஸ், வீண் போகலே...."

பார்வதி தன் கண்களைப் புடவையால் துடைத்துக் கொண்டாள்.

"ப்ரியா... அந்த ஆளெ ஃபோன்லே கூப்பிடு... அதான் அந்த மீஞ்சூர் கோவிந்த ராஜாச்சாரியை! கிரிஷ் வந்தாச்சுன்னு சொல்லு. அவரு நான் ஒரு பைத்தியம்னு நினைச்சுக்கிட்டிருந்தாரு. உடனே வந்து பார்க்கச் சொல்லு. அப்பத் தெரியும் நானு அவரா பைத்தியம்னு... இந்த வக் கீல்களே இப்படித்தான் எல்லாமே சந் தேகம். அதிலேயும் வயசான வக்கீலுன்னு தே பிகம் ரியல் இடியட்ஸ்."

பார்வதி தன்னை மறந்து சிரித்தாள்.

(தொடரும்)

# சேம் மேட்

சுபா

நிகழ் காலத்துக்கு வருவதற்கு முன்னால் 'ஆதௌ கீர்த்தனாரம்பத்திலே' என்று ஆரம்பித்தாக வேண்டும். அப்போதுதான் இந்தச் சமாசாரம் கொஞ்சம் மனசில் கூடி வரும். ஜோட்டால் அடிப்பதற்குக் கதவு மூலையைக் கண் நாடாமல் இருக்கும். எனவே சுருக்கமாக—

அது ஒரு சோம்பலான பிற்பகல்!

சாலையில் போக்கு வரத்து க்ஷீணித்துப் போய், பாதசாரிகள் சுரங்கப் பாதையை நிராகரித்து மாரை நிமிர்த்தி நேராய்ச் சாலை ஸ்கூட்டர்களை அலட்சியமாகப் பார்த்து, பாய்ந்த நேரம்.

ஓசியில் வருகிறதே என்று வயிறு புடைக்கத் தின்றதில் கண்ணை அசத்திற்று. இமை தானாய்க் கீழிறங்கி, ஜடப் பொருள்களை உணரும் சக்தியைக் கண்களுக்கு இல்லாமல் செய்ய, ஆஃபீஸ் லெட்ஜரில் நளினி தெரிந்தாள்.

நளினி! கொஞ்ச நாட்களாய் பஸ் ஸ்டாண்டில் கடைக் கண்ணால் காதலிப்பவள். லோ ஹிப்பில் நேவல் பாயிண்டைக் காண்பிப்பவள். பக்கத்தில் இருக்கும், ஹைதர் காலத்து காவி பூசிய கவர்ன்மெண்ட் ஆஃபீஸிலிருந்து ஐந்து மணிக்கு அலங்காரமாய் வெளியே வருபவள். மாசம் முதல் தேதி வின்னாமல் விரியாமல் ஐந்நூறு ரூபாய்க்கு மேல் சம்பளம் வாங்குபவள். அதற்கு மேல் விஸ்த ...ாய் இந்தக் கதைக்குத் தேவையில்லாதவள். இடீரெனக் கண் சிமிட்டினாள்.

'ச்சீ...' என்றேன். திடுக்கிட்டேன். கருமம்! தூங்கிப்போயிருக்கிறேன். விழித்துக் கொள்ள, மறுபடியும் கண் அசத்தியதால் லெட்ஜரில் தப்புத் தப்பாய்க் கூட்டினேன். கழித்தேன். இருக்கட்டுமே! எதற்கு இருக்கிறான் ஆபீஸர்? மொட்டைக் கையெழுத்து போடவா? அவன் பார்த்துக் கொள்கிறான். மறுபடியும் தப்பாய்க் கூட்டுகையில் 'சார்...'

குரலைக் கிணற்றுக்குள்ளிருந்து உணர்ந்து நிமிர்ந்தேன். எதிரில் கவுண்டருக்கு அப்புறத்தில் பாஸ்போர்ட் சைஸில் தெரிந்தவன் இளைஞன். கறுப்பான முகத்தில் அதீதமாய்ப் பவுடரை அப்பியிருந்தான். தலையில் முடி சுருள் சுருளாய் விளையாடியிருந்தது. நெற்றி சுருங்கியிருந்தது. தனியாய் ஒட்ட வைத்த மாதிரி தெரிந்த காதுகளில் மேல் மடலில் கறுப்பாய் இரண்டொரு முடிகள் புறப்பட்டு வளைந்திருந்தன. கண்ணில் பாப்பா அதீதமான கறுப்பில் பளபளக்க, பற்கள் வெளேரென்று ஜொலித்துக் கொண்டிருந்தன.

'இவனை எங்கேயோ பார்த்திருக்கிறேமே'

கஸ்டமராய் இருக்கும்!

''வியாபார நேரம் முடிந்து விட்டது. தயவுசெய்து நீங்கள் நாளைக் காலை பத்து



மணியிலிருந்து இரண்டு மணிக்குள் வரவும்'' என்றேன் ஆங்கிலத்தில்.

''ஸார், நான் வேங்கடரமணன்'' என்றான் அவன்.

''எனக்கு ஒரு ரமணனையும் தெரியாது... ஓ....ஸாரி... ப்ளீஸ்... கம் இன்...'' என்றேன். அவன் கவுண்டரைப் பிரதட்சிணம் செய்து உள்ளே நுழைவதற்குள் திரும்பி னேன். புதிதாய்ச் சேருகிறவன்... ஃபோட்டோவை அப்ளிகேஷனில் பார்த்து 'ப்ச்' என்று உதட்டைப் பிதுக்கியது அந்த விநாடியில் நினைவைத் தாக்கிற்று.

''அக்கவுண்டண்ட் ஸார்... மிஸ்டர் வேங்கடரமணன் வந்தாச்சு....''

கணேசன் தலை நிமிர்ந்தார். கண்ணாடியைக் கீழே இறக்கினார். ஃப்ரேமுக்கு மேலே யிருந்து அவனைத் துழாவினார். 'வாங்க....வாங்க....' என்றார்.

ரமணன் கொஞ்சம் சங்கோஜப்பட்ட மாதிரி தெரிந்தது.

''நாளைக்குத்தானே நீங்கள் வேலையில சேரணும்?''

''ஆமா...ஆனா இன்னைக்கே ஆஃபீஸைப் பார்த்துட்டுப் போயிட்டா சௌகரியமா இருக்குமேன்னு பார்த்தேன்.''

''வாஸ்தவம்'' என்றார் கணேசன்.

''இங்கதான் தங்கியாகணும், புது இடம், ரூமெல்லாம் கிடைக்குமா இல்லியான்னு தெரியாது.... ஒரு நாள் முன்னாடியா வந்தா தெரிஞ்சுக்கலாம் இல்லியா...?''

''ஆமாம்....ஆமாம்...இப்ப எங்கே தங்கி யிருக்கீங்க?''

''கிருஷ்ணா பவன்ல... அங்க மாஸ வாடகைக்கு ரூம் இல்லேன்னுட்டாங்க...''

''இன்னும் கரண்டியைக் கையில பிடிக் கலையா?''

''என்னது?''

''கல்யாணம் ஆகலையா?''

''ஹோ'' வென்று சிரித்தான். இமை நனைந்து போயிற்று.

''நல்ல ஜோக் ஸார்...அடியேங்கறதுக்கு ஆளைக் காணுமாம்... பிள்ளைக்கு என்ன பேருன்னு கேட்ட கதையா இருக்கு ஸார்... இத்தனை நாளா நான் வேலையில்லாப் பட்டதாரி... மாடு மாதிரி மூணு தங்கச்சிங்க... ஒவ்வொண்ணுக்கும் நகையா இழைச்சுப் போடணும்... ஒவ்வொருத்தன் கையிலயா பிடிச்சுக் குடுக்கணும்... எனக்கு என்ன சம்பளம் வரும்? பிடிப்பு எதுவும் இல்லாம நானூற்றித் தொண்ணூற்று ஒன்பது ரூபாய் இருபது பைசாக்களா? முதல் கிராம் தங்கம் ஒண்ணுந்தேதிவாங்கணும்... எனக்கு ஏது ஸார் கல்யாணம்?''

''தமாஷாப்பேசறீங்க'' என்றார் கணேசன்.

''சுந்தரராஜன்... வாப்பா.. ஸார் புதுசா வந்திருக்கார்... எல்லாருக்கும் இண்டர்ட்யூஸ் பண்ணிவிடு...''

ஒவ்வொரு முகமாய்க் காட்டிக் காட்டிப் பெயர் சொல்லி அறிமுகம் செய்து வைக்கையில் செயற்கையாய்ச் சிரித்துக்கொண்டே கூண்டில் இருக்கிற பிராணிக்குப் பயந்து கையை நீட்டுகிற மாதிரி மெதுவாய் நீட்ட, அவர்கள் குலுக்கினார்கள்.

''இங்கே ஏதாவது ரூம் கிடைக்குமா?'' என்று தயங்கினான் வேங்கடரமணன்.

''சுந்தரராஜனைப் புடிச்சிக்குங்க... அவரும் உங்களை மாதிரிதான்... பாச்சலர்.. ஸாரி... அன்மேரீட்... ரூம்ல இருக்கார்... ஹோட்டல்ல சாப்பிட்டும் குண்டா இருக்கார்...'' என்று என்னைக் காட்டினார் கணேசன்.

''இப்போதைக்கு வேணும்னா என் ரூமிலேயே தங்கிக்குங்க... நான் தனியாத்தான் இருக்கேன். ரூம் ரெண்டை ஆளுக்குப் பாதியா பிரிச்சுக்கலாம்... அப்புறம் பேஸ்ட், பிரஷ், செண்ட், எல்லாம் அவங்கவங்க கணக்கு....'

''அது போதும் சார்...'' என்றான் அவன் புதையலைக் கண்ட மாதிரி வாய் பிளந்து.

தப்பு என்பேரில் என்று இப்போது தோன்றுகிறது.

ரூமுக்கு வந்து சேர்ந்த இரண்டாவது நாளே சுத்தமாய் மூட்டை கட்டி, ரூம் தூசியையும் சேர்த்து அனுப்பி யிருக்கலாம். அவனது சர்க்கரை தடவிய வார்த்தைகளில் மயங்கிப் போனேன்.

கடைக்கண்ணால் காதலித்த நளினியைப் பிருத்விராஜனைக் கவர்ந்து போனான். சிரிக்கச் சிரிக்கப் பேசி என் முன்னாலேயே அவள் கழுத்தை வளைத்துக் கொள்கிறான்.

ச்சே.....

'யாரா யிருந்தாலும் சரிப்பா.... அடிவெட்டா ஒரு தடவை பார்த்தா போதும்...









ஒரு தடவை சிரிச்சாப்போதும்... அடுத்த நாள் என் மடியில் கருளுவா...' என்கிற அவன் கர்வத்தில் நெருப்பை வைத்துப் பொசுக்க லாம் போலிருக்கிறது. நளினியை விட்டு விடலாம். அவள் போனால் இன்னொரு மாலினி.

எதிர் யூனியனுக்குள் போய்ப் புகுந்து கொண்டு எனக்கு எதிராய்க் கொடி தூக்கு கிறான். போகையில் வருகையில் 'ஜிங்-சக்' என்கிறான். ஜால்ராவாம்!

ஆரம்பத்தில் கேட்டபோது இல்லை இல்லை யென்று பூம்பூம் மாடு கணக்காய்த் தலையை ஆட்டினான். சிகரெட், தண்ணி, சர்வ சனி யன்களும் அவனுக்கு இருக்கிறது. கேட் டால் இளிக்கிறான்.

என்ன செய்யலாம்?

தனியாய் வேட்டு வைக்க வேண்டும். நேருக்கு நேர் தாக்கக் கூடாது. பின் முது கில் ஆழக் குத்த வேண்டும்.

நினைத்துக்கொண்ட மூன்றாம்நாள் மீன் சிக்கிக் கொண்டது.

ஆபீஸ் கல்லாப் பெட்டியில் கால் மேல் கால் போட்டு அவன் உட்கார்ந்து, உற் சாகமாய் ஒரு சினிமாப் பாட்டை முணு முணுத்துக் கொண்டு வேலை தொடங்கின நேரம். பக்கத்து டெஸ்பாட்ச் ஸீட்டில் முந்தின நாள் கணக்கு சரிப்பட்டு வராமல் மறுபடியும் மேய்ந்து கொண்டிருந் தேன். 'ராம் அண் கோ' விலிருந்து ஆசாமிகள் வந்தார்கள். இரண்டு பேர், கல்லாவுக்கு முன்னால் போய் நின்றுகொண்டு அறுபத்து நான்கு பற்களையும் காட்டி இளித்து விட்டு, பத்து விரல்களையும் பிரித்துத் தூக்கினார்கள். பக்கத்து ஸீட்டுக்காரனை என்னை உதாசீனம் செய்தார்கள். எரிச்சலாக இருந்தது.

வேங்கடரமணன் சவமாய்ச் சிரித்தான். உள்ளுக்குள் பல்லவி ருள் கொட்டிற்று.

பார்வையை ஒரு முறை பின்னுக்கிச் சுழற்றியதில் என்னைக் கவனிக்க மறந்து போனான். ஐந்து கட்டுகளை எடுத்தான். நூறு ரூபாய்க் கட்டு. ஐம்பதாயிரம்! சடக் கென்று வெளியே நீட்ட, ராம் அண் கோ, இரையை உள்ளுக்கு வாங்குகிற பல்லியாய் அந்தக் கட்டுக்களைத் தோல் பையில் தள் ளிற்று. மறுபடியும் சிரிப்பு... கைகளின் விரிப்புத் தூக்கல். போய்விட்டார்கள்.

மெதுவாய் எழுந்தேன். பூனையாய்ப் பர விணேன். ராம் அண் கோவுக்கு ஏதாவது பேமெண்ட் இருக்கிறதா என்று துளாவி னேன். இல்லை. கண்டிப்பாய் இதில் ஏதோ சகுனி வேலை இருக்கிறது! மத்தியானம் சரியாய் இரண்டு மணிக்கு, கொடுக்கல் வாங்கல் முடிகிற நேரத்தில் மறுபடியும் ராம் அண் கோ வந்தது. பணத்தை நீட் டிற்று. 'நாலு மணி நேரப் புரட்டலுக்கு கமிஷன். வாரே வா... நாளைக்குப் பார்க் கலாம். பையா, தங்கச்சிக்கு இராம், இரா மாய்த் தங்கம் சேர்க்கிறாயா? கையில் காப்பை மாட்டி விடுகிறேன்.'




மறுநாள் ராம் அண் கோவைக் காணவில்லை.

அடேடே... என்று பதறிற்று மனம். விட்டு விட்டோமோ? நாள் சுணுவாய்ப் போய்விட்டது.

அதற்கு அடுத்த நாள் நான் நரி முகத்தில் விழித்திருக்க வேண்டும். சொல்லி வைத்த மாதிரி ஆஃபீஸ் திறந்தவுடன் ராம் அண்கோ வந்து விட்டது. வாயைப் பிளந்து வாங்கிக் கொண்டு போய்விட்டது.

எழுந்தேன். ''ஸார்'' என்று கணேசனைக் கூப்பிட்டேன். அடுத்த ஐந்தாவது நிமிஷம் ஜீப் சத்தத்தின் உறுமல். காது குளிர்ந்தது. இன்ஸ்பெக்டரை எதிரில் வைத்துக்கொண்டு கல்லாப் பெட்டியைத் திறந்து சரிபார்த்தார் கணேசன். இருப்பில் ஐம்பதினாயிரம் பஸ்டி அடித்தது.

''இந்தப் பணத்துக்கு ராம் அண் கோவில் உனக்கு எவ்வளவு கமிஷன் தர்ராங்கப்பா?'' என்று அமைதியாகக் கேட்டேன். பயந்துவிட்டான். சட்டை தொப்பலாய் நனைந்து போயிற்று. போட்டிருந்த பாண்ட்டை எட்டிப் பார்க்க முடியவில்லை. அதுவும் நனைந்திருக்கும்.

''விட்டுடுங்க ஸார்... தெரியாமப் பண்ணிட்டேன் ஸார்...இந்தத் தடவை மன்னிச்சுடுங்க ஸார்... பணம் ரெண்டு மணிக்குச் சரியாத் திரும்பி வந்துடும் ஸார்....''

ஏகமாய் 'ஸார்' போட்டான். பாவமாய்த்தான் இருந்தது. இருந்தாலும் ஒன்றும் செய்வதற்கில்லை. எல்லை மீறிப் போய்விட்டது.

''ஆஃபீசுக்கு எவ்வளவு பெரிய துரோகம் — தெரியுமில்லே?''

''என்னை அரெஸ்ட் பண்ணினகையோட அவனையும் அரெஸ்ட் பண்ணுங்க'' என்றான்.

இன்ஸ்பெக்டர் புரியாமல் அவனைப பார்க்க, கணேசன் என்னைப் பார்த்தார்.

உள்ளுக்குள் மார்பு தடால் தடால் என்றது. தன்னிச்சையாய் உடம்பு உதறிற்று.

''எதுக்கு?'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''டெஸ்பாட்ச் ரிஜிஸ்டரைப் புரட்டிப் பாருங்க... இல்லாத கவருக்கெல்லாம் எண்ட்ரி போட்டு, போட்டு ஒரு நாளைக்கு இருபது ரூபாய்க்கு மேலே அவன் சுருட்டற வித்தை புரிபடும்.... யாரும் செக் பண்றதில்லேங்கற தைரியம்... என்னை மறந்துட்டான்.... ஏண்டா என்னை மட்டும் உள்ளே அனுப்பிச்சிட்டுநீ நிம்மதியா இருந்துடுவியா?''

குப்பென்று உடம்பில் நெருப்பு படர்ந்தாற்போல் இருந்தது.

சுவாரஸ்யமாய் ஒரு சின்னக் கூட்டம் சேர்ந்துகொள்ள, இன்ஸ்பெக்டர் சாடை காட்டி எங்களை உள் ரூமுக்கு வரச் சொன்னார்.

போனோம். கணேசன் ஒன்றும் புரியாமல் பின்னாலேயே ஓடித் தடுக்கி வந்தார்.

''யெஸ் இன்ஸ்பெக்டர்'' என்றேன் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு.

''ரெண்டு பேரும் ஸ்டேஷனுக்கு வாங்க... விசாரிச்சுடலாம்'' என்றார்.

விசாரிச்சுடலாம்!

''ஜீப்லதானே இன்ஸ்பெக்டர்?'' என்றேன்.

''ஓ...ரொாஜு¬வேட் இல்ல? அப்படித்தான் பேசுவீங்க...''

சத்தம் போடாமல் விலங்கு மாட்டிக் கொள்ளாமல் ஜீப்பில் ஏறினோம்.

ஸ்டேஷன் வாசலில் ஏதோ ஒரு 'ஒன் நாட் ஒன்' எங்களை தெம்பி உள்ளே தள்ள, நான் முரண்டு பிடிக்க, ''போடா'' என்று கழுத்தில் கைவைத்தான்.

இன்ஸ்பெக்டர் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு எங்களை நிற்க வைத்துப் பார்த்தார். சாராய நெடி வீசிற்று. ஒரு ஓரத்தில் பானை பானையாய் அடுக்கி யிருந்தது.

''இதெல்லாம் ரெய்ட்ல பிடிச்சதா இன்ஸ்பெக்டர்?'' என்று கேட்டேன்.

இன்ஸ்பெக்டர் என்னைப் பார்க்காமல் 'ஃபோர் நாட் ஃபோர்' என்றார். மடிப்பு கலைந்த தொள தொள காக்கி பாண்ட் ஒன்று விரைப்பாய் சல்யூட் அடித்து நின்றது.

''இவங்களை அந்த லாக்கப்பில ஒண்ணு தள்ளு.... நான் அவசரமா வெளியே போகணும்... போய்ட்டு வந்து விசாரிக்கிறேன்.....''

நான் உடைந்து போனேன். கண்ணில் நீர் கோத்து என்னை அறியாமல் சரசரவென்று கீழே இறங்கிற்று. சாஷ்டாங்கமாய்க் கீழே விழுந்து நமஸ்கரித்தேன். தலையைத் தூக்கினேன். வெளியில் வந்த குரல் வணக்கமாய் இருந்தது. தழுதழுத்தது.

''வேண்டாம் சார்... எங்களை ஒரே லாக்கப்பில் போடாதீங்க! சார்... தனித் தனியா போட்டுடுங்க சார்....''

சுப நிகழ்ச்சிகளுக்கும் முகூர்த்தங்களுக்கும் சாரதா ஸின்
புதிய டிசைன்கள் விசேஷ
பெயர் பெற்றது.

லாவண்யா

லலிதா





# சாரதாஸ்

(முகூர்த்தப் பட்டு புடவைகளுக்கு அதிர்ஷ்டமான இடம்)

தன் பில்டிங்
மவுண்ட் ரோடு
சென்னை-600 002
போன் : 87177

N.S.B. ரோடு
திருச்சி-620 002
போன் : 27077

தீபாவளி முடிய ஞாயிற்றுக்கிழமை விற்பனை உண்டு

SARATHA'S
MADRAS & TRICHY

போட்டிக் கதை 7

# அவராகப் பேசவில்லை

- பாமா -

வீட்டுக்குள் நுழையும்போதே, பிஞ்சுக் கால்களில் சதங்கை ஒலியெழுப்ப ஓடிவந்து அப்பாவிடம் தஞ்சமடையும் வெள்ளைப் புறாக் குஞ்சு போன்ற குழந்தை அனுஷாவைக் காணாததால், இங்குமங்கும் பார்த்த ரகு, ''அனுஷாக் குட்டி தூங்கிட்டாளா டார்லிங்....?'' என்று மனைவி மாலாவிடம் வினவினான்.

''அடேயப்பா.... கரிசனம் ரொம்பத்தான் வழியுது... போதுமே உங்க அக்கறை'' என படபடவென்று அடக்கி வைத்திருந்த எரிச்சலுக்கு வடிகால் கிடைத்ததும் சிறிது சாந்தமானவளாய்,

''அப்பா வந்த பிறகுதான் போர்ன்விடா குடிப்பேன் என அடம் புடிச்சுட்டு இப்பத்தான் தூங்கினா.... பாவம் குழந்தை, வாசலுக்கும் உள்ளுக்குமாய் ஓடிஓடி டயர்டா ஆயிட்டா....'' என்றாள்.

டிரஸ் சேஞ்ச் செய்து, கைகால் முகம் கழுவி, டவலால் துடைத்தவாறே, ''சாப்பிடலாமா டார்லிங்.... இன்னிக்கு நல்ல பசி....'' என்று கேட்டுக் கொண்டே டைனிங் டேபிளில் அமர்ந்தான்.

'நல்ல பாம்பு' என்கிற மாதிரி 'நல்ல பசி' நல்ல மழை, நல்ல வெய்யில்..... இது என்னமோ அப்படி ஒரு விசித்திரமான 'நல்ல அடைமொழி!' என எண்ணியதன் விளைவாக முகிழ்த்தெழுந்த புன்சிரிப்புடன் பரிமாறினாள்.

## அறிமுக எழுத்தாளர்

மூன்று குழந்தைகளுக்குத் தாயாக, குடும்பத் தலைவியாக இருக்கும் எனக்கு இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள இளையான்குடி சொந்த ஊர். என் கணவர் டாக்டர் E.A. சித்திக் அவர்கள், இந்திய விவசாய ஆராய்ச்சி கழகத்தில் விஞ்ஞானியாகப் பணியாற்றுகிறார். கடந்த பதினைந்து ஆண்டுகளாக டெல்லியில் வசித்துவரும் நான் படித்தது எம்.ஏ. (அரசியல்)

இந்திராபுரி மாதர் சங்கத்தின், பொதுச் செயலாளராகவும், முக்கிய நிர்வாக அங்கத்தினராகவும் பல ஆண்டுகள் பணியாற்றிய எனக்கு அவ்வப்போது சமூக சேவை செய்வதிலும், நவீன தமிழ் இலக்கியங்களை வாசிப்பதிலும் ஆர்வம் உண்டு. -பாத்திமுத்து



மறுநாள் காலையில் வேலை அதிகம் இருந்ததால் அலுவலகத்துக்குச் சற்று முன்னதாகவே கிளம்ப வேண்டியிருந்தது. அனுஷா தூங்கிக்கொண்டிருந்தாள். முதல் நாள் இரவும் லேட்டாக வந்ததால் அனுஷாவிடம் விளையாட முடியவில்லை. தூங்கிவிட்டாள். அனுஷாவிடம் கொஞ்சாமலோ, 'டாடா' காட்டாமலோ போக மனம் வராமல் மகளை எழுப்பி நெஞ்சுடன் அணைத்துக்கொண்டான் ரகு. சிறு சிறு விஷயங்களிலும் கூட சென்டிமென்டலாக இருப்பான்.

''.....டாடி.....டாடி.....'' தூக்கம் சரியாகக் கலையாமல் அனுஷா சிணுங்கினாள்.

''அனுஷாம்மா.... டாடிக்கு டைம் ஆயிடுச்சு.... முதல்ல ஒரு முத்தா, பட்டு முத்தாக் குடுப்பியாம்.... அப்புறமா 'பைபை' சொல்லுவியாம்'' என்றவன் குழந்தையின் கைகள் இரண்டையும் தூக்கி மேலும் கீழுமாக ஆட்டினான்.

திடீரென்று ரகுவின் முகம் கறுத்தது. ஏதோ குழந்தையோடு இணைந்தசப்தம் ஒன்று கேட்காதது மாதிரி அவனுக்குத் தோன்றியது. குழந்தையின் கால்களில் அணிந்திருந்த சதங்கையைக் காணவில்லை என்பது புரிய அதிகப் பிரயத்தனம் தேவைப்படவில்லை. அந்தப் பாதசரத்தின் ஒலியை வெகுவாக ரசிப்பான். ஏனெனில் அனுஷாவின் ஆண்டு நிறைவுக்கு அவனுடைய ஏழைத்தாய் அளித்த அன்புப் பரிசு.

''அனுஷாக்குட்டி பாதசரம் எங்கே மாலா....?''

''ஓ....அதுவா? கழற்றிப் போட்டு விட்டேன்.... நீங்க கிளம்புங்க டியர்... நேரமாகலே?....''

''அது எப்பவும் குழந்தை கால்களில் இருந்து பிரியக்கூடாது என்று கண்டிப்பாகச் சொல்லியிருந்தேன்ல மாலா....''

''அடேயப்பா... பெரிய... பொல்லாத பாதசரம்... எங்கப்பா போட்ட... அனுஷா கழுத்திலே மின்னுற டாலர் செயினைப் பார்க்கறப்போ இந்த வெள்ளிக் கொலுசு கர்நாடகமா இருந்துச்சு... அதனாலே.....''

''அதனாலே, என் பேச்சையும் லட்சியம் செய்யாமக் கழட்டி எறிஞ்சியா? அது என் அம்மா செய்து போட்டதுன்னு தெரியுமில்லே?''

''எப்பப் பார் அம்மாவா... ஒரு குழந்தைக்கும் தகப்பனாயிட்டீங்க... சரியான அம்மாக் கோண்டு....''

ரகுவுக்குப் பற்றிக் கொண்டு வந்தது.

ரகுவின் ஐந்து வயதில் அவனுடைய தந்தை இறந்த பிறகு ஆதரிப்பார் யாருமின்றி, தன் தாய் சமையல் வேலை செய்து தன்னைப் பட்டப் படிப்பு வரைபடிக்கவைத்து; மகன் வயிறு நிரம்பியதைத் தன் வயிறு நிரம்பியதாக நினைத்து உணர்வூட்டி, உயிரூட்டி, வளர்த்தது... பணக்காரியான ஏக புதல்வி மாலாவைக் காதலிக்கும் விஷயத்தை முதலில் அன்னையிடம் தெரிவித்தபோது முதலில் சற்றே தயங்கினாலும், மகனுக்கு சந்தோஷமளிக்கும் என்னும் ஒரே காரணத்துக்காக, அதன் பின் விளைவுகள் தெரிந்தும் சம்மதித்தது... அனுஷாவின் ஆண்டு நிறைவுக்காகக் கூப்பிட்ட போதுகூட, தான் அந்த இடத்துக்குப் பொருந்தாத நபராகத் தெரிவோம் எனவராமல் ஒதுங்கியிருந்தது. கலர்ப்பேப்பரில் சுற்றிய அந்த எளிய பரிசை, மூன்று வயது நிரம்பும்வரை காலில் கழற்றாமல் அணிவிக்கும்படி ஆசையுடன் கேட்டுக்கொண்டது... என ஒவ்வொன்றும் மனக்கண்ணில் ஒருசிலவிநாடிகளில் ஓடிமறைந்தது.

''...மாலா... தெய்வமாகிவிட்ட அந்தப் புண்ணியவதியை இழிவாகப் பேச உனக்கு என்ன தகுதி இருக்கு? உயிரோடு பெத்த மகனைத் தாரைவார்த்துக் கொடுத்துவிட்டுத் தன்னந் தனியாகவே கடைசிவரை வாழ்ந்து உயிரை விட்ட தெய்வத் தாயைப் பற்றிப் பேசக்கூட உனக்கு யோக்யதை இல்லை...''

''இப்படி அம்மாப் பித்துப் பிடித்தவர்கள் எதற்குக் கல்யாணம், பின்னே குட்டி என்று...'' வீருப்பாகப் பேச ஆரம்பித்தவள் பாதியிலேயே தேம்பி அழ ஆரம்பித்தாள். விக்கி விக்கித் தொடர்ந்தாள்:

''வரவர ஆளே மாறிப் போயிட்டீங்க... இப்போவெல்லாம் நீங்க நீங்களாவே இல்லே. கன்னுப் பின்னுன்னு பேசாதீங்க... நான் தான் அறிவில்லாமத் தனிக் குடித்தனம் போகணும்னு சொன்னேன்னு வச்சுக்குங்க. உங்களுக்குப் புத்தி எங்கே போச்சாம்?..''

''...அதைக் கட்டாயம் சொல்லித்தான் ஆகணும்...இத்தனை நாளா, உன் மனத்தைப் புண்படுத்தக் கூடாதுன்னுதான் சொல்லாம இருந்தேன். நீ சந்தோஷமா, நிம்மதியா இருக்கவும், நான் இரு தலைக் கொள்ளியாத் தவிக்கிறதைத் தடுக்கவும் என் தாய் ஆணையிட்டாங்க. உன்னோட தனிக் குடித்தனம் நடத்த மனப் பூர்வமாச் சம்மதிச்சு என்னையும் சம்மதிக்க வைச்சாங்க... எப்படி? நான் உன்கூடத் தனிக் குடித்தனம் நடத்தப் போறதில்லேன்னு தற்கொலை செஞ்சுக்குவேன்னு என்னை மிரட்டினாங்க... அதைத் தவிர்க்கத்தான் நான் தனிக்குடித்தனத்துக்குச் சம்மதித்தேன், போதுமா?''

மாலாவுக்கு அழுகையும் ஆத்திரமும் ஒரு புதிய உணர்வாக இதுவரை அனுபவித்திராத துக்கமாக வெளி வந்தது. செல்வச் செருக்கு மிக்க மாலா, இவ்வளவு நாளும், தன்மீதுள்ள காதலால்தான் அவன் தன்னோடு குடித்தனம் நடத்தியதாகஎண்ணி இறுமாந்திருந்தாள் அவள். மனக் கோட்டை.. மண் கோட்டையாகக் கண்



ணெதிரே சரிந்ததைத் தாங்கிக்கொள்ள முடியவில்லை.

''உங்க வேலையை நீங்க கவனியுங்க... குழந்தைக்கு எதைப் போடணும், எதைக் கழட்டணும் என்னும் விஷயங்களில் எல்லாம் அநாவசியமாத் தலையிட்டுக்கொண்டு...''

ரகுவின் அடி மனத்தில் நீறு பூத்த நெருப்பாக மறைந்திருந்த அவனுடைய சுயரூபம் படம் எடுத்து நின்றது. ''இப்ப ரெண்டுல ஒண்ணு எனக்குத் தெரிஞ்சாகணும்... ஒண்ணு உடனே பாதசரத்தை எடுத்தாந்து குழந்தை கால்ல போடணும்... இல்லே... இப்பவே நமக்குள்ள எந்தத் தொடர்பும் இல்லேன்னு ஆகணும்...'' என்றான்.

இந்த நான்கு வருட தாம்பத்தியத்தில் இதுவரை ரகு இப்படியெல்லாம் பேசியதே யில்லை.

உண்மையிலேயே மாலா திடுக்கிட்டுப் போனாள். இவ்வளவு பெரிய வார்த்தைகளைக் கூசாமல் கொட்டுவான் என எதிர்பார்க்கவில்லை. அவன் குரலில் இருந்த உறுதி, அவள் இதயத்தைப் படபடக்கச் செய்தது. விவேகியான மாலா அட்ஜெஸ்ட் செய்து கொண்டு போவதுதான் நல்லது என நினைத்தவளாக, பாதசரத்தை அணிவித்தாள். அதைப் பார்த்த பிறகு, ரகு பேசாமல் காரில் போய் ஏறிக்கொண்டு போய் விட்டான்.

மத்தியானம் 'லஞ்சு'க்கு வழக்கமாக வருபவன் அன்று வரவில்லை.

''அனுஷா பாப்பா இங்கேயா இருக்கு.. மாலாம்மா...?'' என வினவிய வேலைக்காரியை விநோதமாக ஏறிட்டுப்பார்த்தாள். தன் கற்பனை உலகிலிருந்து மீண்டவளாக ''என்னடி லட்சுமி... என்ன சொல்றே... உங்கூடத்தானே வந்திருப்பா...'' என்றாள்.

''நான் காயப்போட்ட துணிகளை யெல்லாம் மடித்து வைத்துக் கொண்டிருந்தேன். பாப்பா இங்கே உள்ளேதான் இருக்கும்னு நினைச்சேன்'' என்று பரபரப்புடன் கூறியவளாக நாலாபுறமும் ஓடி ஓடித் தேடினாள் லட்சுமி.

''அனு....அனுஷாக்குட்டி...'' எனக் குரல் கொடுத்தவாறு மாலாவும் வீடு முழுக்க, ஒரு இம்மி, இடுக்கு விடாமல் தேடிவிட்டாள். அவள் உடலும், காலும், கைகளும் சோர்ந்து விட்டன.

''எப்படி லட்சுமி... இப்படி மசமசன்னு நின்னு எப்படி? மீனம்மா வீட்டுல கேட்டியா?''

''அவங்க வீடு பூட்டியில்லே இருக்குது...'' என்று பதில் கூறினாள் லட்சுமி.

'பாப்பாவைப் பொறுப்பாப் பார்த்துக்கணும்னுதானே, கூடுதல் சம்பளமும், சாப்பாடும் குடுத்து நம்மளை வேலைக்கு வச்சாங்க. இப்படி மதிகெட்டத்தனமா புத்தியை அடகு வைச்ச மாதிரி... இருந்துட்டேனே... நான் என்ன செய்வேன்'' என்று எண்ணி எண்ணி மாய்ந்து போனாள் லட்சுமி.

ரகுவுக்கு விஷயத்தைச் சொல்லிவிடுவது தான் முறை என்று போனில் எதையும் வளவளக்காமல் ''உடனே வீட்டுக்கு வாங்க ரொம்ப அவசரம்....'' என்று கூறிப் போனை வைத்துவிட்டாள் மாலா.

''காலையில் மாலாவிடம், ஒரு அற்ப விஷயத்துக்கு அநாகரிகமாக நடந்துகொண்டிருக்க வேண்டாமோ... வர வர, அவள் ஃபீல் பண்ணுற மாதிரி ஆள் மாறித்தான் போகிறோமோ...'' என மனத்துக்குள் கூட்டிக் கழித்து, பெருக்கி, வகுத்துக்கொண்டிருந்த சமயம் மாலாவின் போன் வரவும், எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிக் கொண்டு, மனத்துக்குள் ஒரு கலக்கத்துடன், நடையில் ஒரு தயக்கத்துடனும் அடுத்த பதினைந்தாம் நிமிடம் வீட்டுக்குள் நுழைந்தான்.

''மாலா.... அனுஷா எங்கே? என்ன ஆச்சு?'' என்று கேள்விகளை ஒன்றன் பின் ஒன்றாக அடுக்கியவாறு மாலாவின் அருகே வந்தான் ரகு.

மாலா பேச இயலாமல், துக்கத்தில் தத்தளித்தபோது, ஓரமாக நின்றிருந்த லட்சுமி விஷயத்தைப் பக்குவமாக விளக்கினாள்.

விஷயம் கேட்டதும் ரகு பதறித்தான் போனான்...

இரண்டொரு நிமிடங்களில் மேல் மூச்சு வாங்க ஓடிவந்த லட்சுமி, ''அம்மா... மாலாம்மா... நம்ம பாப்பாவின் கொலுசு சத்தம் மாதிரி ஜல்ஜல் என்று மெல்லிசாக எங்கிருந்தோ கேக்குதும்மா... ஆனா... அது எங்கிட்டிருந்து கேக்குதுன்னுதான் இன்னும் புரியலே'' எனக் கூறினாள்.

அதிலேயே பாதி உயிர் மீண்டது மாதிரி ரகுவும் மாலாவும் மாறி மாறி ''அனுஷா... அனுஷாம்மா... அனுஷாக் கண்ணு....'' எனச் சப்தமாகக் கூப்பிட்டுக் கொண்டே,

**இது ஒரு 'தத்துவம்'**












நாலாபுறமும் தேடினார்கள். அவர்கள் குரல் கொடுத்ததும், 'ஜல்ஜல்' சதங்கைப் பாதசர ஒலி கிணற்றுக்குள்ளிருந்து கேட்பதுமாதிரி கேட்டுப் பிறகு தேய்ந்து மறைந்தது. இப்படி சில நிமிஷத் துளிகள் கண்ணு மூச்சி ஆட்டம் காட்டினாலும், முடிவில் ரகு மாலா லட்சுமி மூவருமே மொட்டை மாடிப் பக்கமிருந்துதான் ஒலி வருவதாகச் சந்தேகப்பட்டனர்.

ஆம்! அது மொட்டை மாடிதான்...! சுவர்கூட ஓர் அடிக்கும் குறைவான உயரம். மாடிப் படி செங்குத்தாக ஏணி மாதிரி அகலமே இல்லாமல் இருக்கும். மாடிக்கு யாருமே போனதில்லை. போவதும் இல்லை. அழுகுரலும், சதங்கைச் சந்தமும் இன்னும் தெளிவாகக் கேட்கவும் மூவரும் மொட்டை மாடிப்படிக்கட்டை நெருங்கவும் சரியாக இருந்தது.

மாடிப் படி மேலே... விளிம்பில் நின்று கொண்டு... கண்ணைக் கசக்கிக் கொண்டு... வெறுங் காலோடு தரைச் சூட்டில் நிற்க முடியாமல் தவித்துக் கொண்டு... சாட்சாத் அனுஷாவேதான். அவள் நின்ற நிலையில் எந்த நிமிடமும் கால் தவறி உருண்டு விழக் கூடிய அபாயம். ஏதோ ஒரு நினைப்பில் ஓடும் பாம்பைத் தாவிப் பிடிக்கும் பயமறியாத் தனத்தில் மாடியில் ஏறிவிட்டு, இறங்க வழி தெரியாமல் குழந்தை பயந்து முழிக்கிறாள். படியில் தவறிவிட்டால்... நினைத்துப் பார்க்கவே முடியவில்லை.

''அனும்மா அங்கேயே நில்லு... டாடி வந்துட்டேன்...'' என்று சொல்லிக்கொண்டே அசுர வேகத்தில் நாலே எட்டில், தன் தேனினுமினிய உயிர்ச் செல்வத்தை அள்ளி வறியவனுக்குக் கிடைத்த புதையலாக அணைத்துக் கொண்டு கீழே இறங்கினான் ரகு.

''என்னைத் தவிக்க விட்டுட்டுப் போயிட்டியேடா கண்ணு... எப்படிடா போனே அனும்மா... என் உயிரே...'' எனக் கொஞ்சியவளாக மாலா குழந்தையை வாங்கிக் கொண்டு உள்ளே சென்றாள்.

''....பாப்பா முகமெல்லாம் குங்குமப் பூவா செவந்து கிடக்கே.... பாப்பாவுக்குப் பசிக்குதோ என்னவோ... வாடி வதங்கிப் போச்சே....'' என்று கூறியவளாக குழந்தையை லட்சுமி வாங்கி, முகம் கழுவித் துடைத்து விட்டுக் கொண்டே பேசினாள்:

''நாம இங்கு வெளியா இருந்த நேரத்துலே விளையாட்டா ஒவ்வொரு படியா ஏறி எப்படியோ மாடிக்குப் போயிருக்க போல... பசியில அங்கேயும் இங்கேயும் ஓடினப்பதான் நமக்கு 'ஜல்ஜல்' என்று கொலுசு குலுங்கு சத்தம் கேட்டது போல... அந்தச் சத்தம் மட்டும் கேக்கலேன்னு...''

மாலாவுக்கோ தன் உயிரனைய மகளைக் காணாமல் தவித்த தவிப்பில் உருவான அவலம்... பொங்கிப் புனலெடுத்த தாய்ப் பாசம்... பேச்சிழந்து இருந்தாள்.

லட்சுமி கீறல் விழுந்த ரெக்கார்டு மாதிரி மறுபடி மறுபடி பிதற்றினாள்:..''...செத்துப் போன பெரியம்மா... அந்த மவராசி... தெய்வமாத்தான் இருக்கணும்... இம்மூட்டு நாளும் இல்லாத அதிசயமா காலேல அய்யாவுக்கு ஏன்தான் இம்முட்டுக் கோவம் வந்துச்சோ... காலுல இருந்த கொலுசை ஏன் கழட்டப் போச்சுன்னு புடிவாதமா இருந்து மறுபடி காலுல போடலேன்னு... எல்லாம் இப்பத்தான் ஒன்னொண்ணாப் புரியுது. அது அவராப் பேசலே.. அவர் பேசின பேச்சில்லே... அவருக்குள்ளே யிருந்துக்கிட்டு யாரோ பேசின மாதிரில்ல பேசினாரு.... இந்தக் கொலுசுச் சத்தம் மட்டும் கேக்கலேன்னு... பாப்பா படியிலே தன்னாலே இறங்குறேன்னு காலே வச்சா... ஆத்தாடி.... நினைக்கக் கூடாது... செத்தவங்களானாலும், பாசமான பெரியவங்க, அவங்க வாரிசுகளுடைய நல்லது கெட்டதுல கூடவே துணை நிப்பாங்க... மத்தவங்க சொல்லத்தான் கேள்விப்பட்டிருக்கேன்... ஆனா இப்ப கண்ணுக்கு மெய்யா... தெரிஞ்சு போச்சு....''

அவளுடைய அங்கலாய்ப்பு இன்னும் ஓயவில்லை. மழை நின்றாலும் தூவானம் நிற்காது என்பது போல் இருந்தது.

ரகு, மாலாவை அர்த்த புஷ்டியுடன் பார்க்கிறான். அதற்கு மேலும் மாலாவால் தாள முடியவில்லை. ''என்னை மன்னிச்சுருங்க... தயவு செய்து...'' எனக் கணவனின் மடியில் முகம் புதைத்து விம்முகிறாள். ரகு அவளுடைய கூந்தலை ஆதரவுடன் கோதி விட்டு அணைத்துக் கொள்கிறான்.

மாலாவின் குரல் குற்ற உணர்வால் கலங்கி, அறிந்திராத புது உண்மைகளைப் புரிந்து கொண்ட கழுகழுப்பில், வித்தியாசமாக ஒலித்தது!







நான் சிங்காதனத்தில் உட்கார்ந்திருக்கிறேன். ஆனால் மந்திரிகள் நாட்டை ஆளுகிறார்கள். என் சொல்லை யார் கேட்பார்கள்? -கிருஷ்ண தேவராயர்

## 29

**வ**ந்தது ஸ்ரீரங்கன்.

''நீங்களா?''

''ஏதோ சத்தம் கேட்டது பார்த்தேன்'' என்றான்.

''தூக்கம் வரவில்லை பழைய ஓலை ஒன்று கிடைத்தது பார்க்கிறேன்'' என்று கூறிய கவர்ணமுகி உடனே தன் அறைக்குப் புறப்பட்டாள்.

ஸ்ரீரங்கனும் திரும்பினான்.

'சந்திக்கிறேன் என்று அர்ச்சுனன் எழுதியிருக்கிறார். சந்திப்பாரா?'என்று நினைத்தாள் கவர்ணமுகி.

அவள் அர்ச்சுனனை எதிர்பார்த்துப் பத்து நாட்கள் ஓடிவிட்டன.

அர்ச்சுனன் வரவில்லை.

காரணம் இருந்தது.

வேலூரரை திம்மராஜா முற்றுகையிட்டிருந்தார். ஊர் முழுவதும் அல்லோலப்பட்டது. தெருக்களில் கூச்சலும் குழப்பமும்.

பொதுஜனங்கள் வீடுகளுக்குள் முடங்கிக் கிடக்க, வீதிகளில் வீரர்கள் குறுக்கும் நெடுக்கும் விரைந்து கொண்டிருந்தார்கள்.

'நம்மூர் நாயக்கர் இந்த வேங்கடராஜாவுக்குப் புகலிடம் கொடுத்திருக்கக் கூடாது' என்று பலர் பேசினார்கள்.

'அவர் நமக்கெல்லாம் மகாராஜா! அவர் ஒருத்தர் இருப்பதால்தான் வடக்கே பீஜப்பூர் சுல்தான் நம்மீது வராமல் இருக்கிறார். எனவே அவரைப் பாதுகாப்பது நம் கடமை' என்றார்கள் பலர்.

நாயக்கரும் அவரதுகாரியஸ்தர்களும்ஜனங்களுக்கு ஊக்கமளித்து முழு மனத்துடன் ஒத்துழைக்கக் கேட்டுக் கொண்டார்கள்.

முற்றுகை ஆரம்பித்து இரண்டு வாரம் சென்றுவிட்டது.

நாட்டில் ஏற்கனவே பஞ்சம் பரவியிருந்தது.

இப்போதுதான் முதல் மழையே பெய்திருக்கிறது.

விவசாயம் இன்னும் ஆரம்பிக்கவில்லை.

மழை விழுந்த பிரமிப்பிலிருந்து இன்னும் ஜனங்கள் எழவில்லை.

இந்நிலையில் கோட்டைக்குள் ஜனங்கள் சேமித்து வைத்திருந்த தானியங்கள் சொற்பமாக இருந்தது.

இரண்டு வாரம் தாண்டியதும் எல்லோருக்கும் கவலை வந்தது. தானியக் கடைகள் மூடப்பட்டு விட்டன. எங்கும் ஜனங்கள் தானியத்தைத் தேடி அலைய ஆரம்பித்தார்கள். மிகவும் சொற்ப விலையில் தங்கம் வெள்ளிகளை விற்க ஆரம்பித்தார்கள்.

முதலில் மன்னர் உத்தரவுகளுக்குப் பயந்து அமைதியைக் காத்த ஜனங்கள் இப்போது நாற்சந்திக்கு வந்து தாராளமாகப் பேச ஆரம்பித்தார்கள்.

வசதி இல்லாத சாதாரண ஜனங்கள் அரிசி கிடைக்காமல் பட்டினி கிடக்க ஆரம்பித்தார்கள்.

வயிறு கிளப்பிய வேதனையில் தைரியமாக அரண்மனை நோக்கிச் சென்று அரிசி வேண்டிக் கலவரம் செய்ய ஆரம்பித்தார்கள்.

பல இடங்களில் சூறைகள் நடந்தன. பல மாளிகைகள் தீக்கு இரையாகின. ஊரே ஓர் ஒழுங்கு இல்லாமல் சீர்குலைய ஆரம்பித்தது.

''எத்தனை நாள் தள்ள முடியும்?'' என்று துயரத்தோடு கேட்டார் வேங்கடராஜா.

வேலூர் நாயகர் பேசவில்லை.

தாமர்ல வேங்கடப்பா குறுக்கிட்டார். ''அர்ச்சுனன் இதற்குள் மதுரைக்குப் போயிருக்க மாட்டான்?'' என்று கேட்டார் அவர்.

''ஹூம்!'' என்று அவநம்பிக்கையோடு திரும்பினார் வேங்கட ராஜா. ''நல்ல நாட்களில்கூட நம்மீது அவருக்கு அபிமானம் இல்லை. இருந்தால் கப்பத்தை ஒழுங்காகக் கொடுக்காமல் இருப்பாரா?'' என்றார்.

''இப்போது உதவி கேட்டு அனுப்பி யிருக்கிறோம். என்ன சொல்கிறார் பார்க்கலாம்!'' என்றார் வேலூர் நாயகர்.

''நமக்கு வாழ்வா தாழ்வா என்பது இப்போது பிரச்னை! தெற்கே நாம் ஐக்கியமாக இல்லாவிட்டால் மொகலாயர்கள் நம்மை அடிமையாக்கி விடுவார்கள்'' என்றார் தாமர்ல.

''ஐக்கியம் என்பது மதுரை நாயக்கர் அகராதியில் கிடையாது.'' என்றார் வேலூர் நாயகர்.

''செஞ்சி,வேலூர் நாயகர்களிடம் நம் மகாராஜா அதிக பாசம் வைத்திருக்கிறார் என்பது திருமலை நாயக்கருக்குக் கோபமோ என்னவோ!'' என்றார் தாமர்ல.

''நம்மிடையே இந்தப் பூசல்கள் வைத்துக் கொள்வது இப்போது முறையல்ல. இப்போது வேண்டுவது ஒற்றுமை'' என்றார் வேங்கடராஜா.

''செஞ்சிப் படையாவது சீக்கிரம் வரவேண்டுமே'' என்றார் வேலூர் நாயகர்.

''வந்தால்தான் முற்றுகையைத் தகர்க்க முடியும். இன்னும் எத்தனை நாள் தாங்குவோம்?'' என்றார் வேங்கடராஜா.



''ஒரே ஒரு வாரம் தாங்கலாம். அதற்கு மேல் ஜனங்கள் புரண்டு விடுவார்கள்'' என்றார் தாமர்ல.

''கோட்டைக்குள் அரிசி இல்லை'' என்றார் வேலூர் நாயக்கர்.

''பதுக்கி வைத்துள்ள அரிசியை வெளியே கொண்டு வந்தால் கூட ஒரு வாரத்துக்குமேல் தாங்காது'' என்றார் தாமர்ல.

விஜயநகர சாம்ராஜ்யத்துக்குத் தெற்கே உள்ள மதுரை, தஞ்சாவூர், வேலூர், செஞ்சி ஆகிய ராஜ்யங்கள் உட்பட்டவை.

இந்த ராஜ்யங்களை ஆளும் நாயக்கர்கள் கப்பங்களைச் செலுத்துவதோடு, சமயம் வரும்போது படைகளும் உதவி, மகா ராஜாவைப் பாதுகாக்க வேண்டும் என்பது நியதி.

ஆனால் விஜயநகரம் ஏற்கனவே க்ஷணித்து விட்டதால் அதன் உறுப்பு ராஜ்யங்கள் எதைப்பற்றியும் கவலைப்படுவதில்லை. தங்கள் தங்கள் பிரச்னைகளிலேயே அவை மூழ்கி இருந்தன.

மேலும் இந்த உறுப்பு ராஜ்யங்கள் ஒன்றின் மீது ஒன்று பொறாமையும் பூசலும் கொண்டிருந்தன.

இதன் காரணமாக விஜயநகரம் என்ற மையத்தின் கீழ் ஒற்றுமைப்படுவது துர்லப மாக இருந்தது.

மேலும் பத்து நாட்கள் ஓடின. ஜனங்களுடைய பொறுமை வரம்பைக் கடந்து விட்டது. சில பட்டினிச் சாவுகளும் நடந்து விட அவர்கள் கூட்டம் கூட்டமாகக் கோட்டை வாயிலை நோக்கிப் படை எடுக்க ஆரம்பித்தார்கள். ''எங்களை விடு! எங்களை விடு!'' என்று அவர்கள் கோஷம் எங்கும் எழ ஆரம்பித்தது.

காவலாளிப் படையினர் அவர்களைத் தடுத்து தங்கள் அசுர பலத்தால் உள்ளே நோக்கி விரட்டி விட,

வெருண்ட ஜனங்கள் போகும் இடம் எல்லாம் தீயைக் கொளுத்திவிட்டுச் சென்றார்கள்.

நிலைமை கட்டுக்கடங்காமல் போகிறது என்று தெரிந்து வேங்கடராஜா சபை ஒன்று கூட்டினார்.

''இனியும் பொறுத்துப் பிரயோஜனமில்லை. நான் வெளியே போய்ச் சண்டை இடுகிறேன். அதற்கு மேல் ஆண்டவன் சித்தம்'' என்றார் அவர்.

''தாங்களா? நிச்சயம் போகக் கூடாது. தங்களை நம்பித்தான் எங்கள் வாழ்வே இருக்கிறது.'' என்றார் தாமர்ல.

''போதும். இந்த விஜயநகர மகா சாம்ராஜ்யத்தை இப்போது ஒரு குறுநிலமாக்கி விட்டோம். இனி நமக்கு ஒரு வாழ்வு



கிடைக்கப் போகிறதா?'' என்று வருத்தத்துடன் அங்கலாய்த்தார் வேங்கடராஜா.

''நிச்சயம் வாழ்வு வரும், மகாராஜா!'' என்று ஒரு அசரீரிக் குரல் கேட்க எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள்.

கம்பீர உருவம் ஒன்று வாயில் நிலைப்படியில் விநயமாகக் கீழே குனிந்தது.

பிறகு அது நிமிரும்போது அங்கே ஸ்ரீரங்கனைக் கண்டார்கள்.

வேங்கடராஜா அவனை ஏறிட்டுப் பார்த்தார்.

''மகாராஜா தங்கள் சபை விவாதங்கள் இடையே குறுக்கிடுவதற்கு என்னைப் பொறுத்தருளுங்கள். தாங்கள் வாழ்வதும் அன்றி இந்த சாம்ராஜ்யத்தை மீண்டும் பழைய மகோன்னதத்துக்குக் கொண்டு வரப்போகிறீர்கள். இது உறுதி. அதற்கான சூசகங்கள் தோன்றிவிட்டன. இந்தச் சிறியவன் தாங்கள் விதித்துள்ள கட்டுப்பாட்டையும் மீறி இங்கே வந்துள்ளதற்குக் காரணம் அதுதான். எனக்குப் படை கொடுங்கள். நான் கோட்டைக்கு வெளியே சென்று போரிடுகிறேன்.''

நிசப்தம் சிறிது நேரம்.

''உன்னால் முடியாது'' என்றார் தாமர்ல.

''ஏன்?'' என்றான் அவன்.

''எம்மிடம் படை பலம் கிடையாது.'' என்றார் வேலூர் நாயக்கர்.

''ஒரு ஐந்நூறு வீரர்களைக் கொடுங்கள். தகர்க்கிறேன்'' என்றான் ஸ்ரீரங்கன்.

''பலிகொடுத்துவிட்டு வருவாய்'' என்றார் தாமர்ல.

வெகுண்டு திரும்பினான் ஸ்ரீரங்கன். ''நிச்சயம் மாட்டேன். ஒன்று வெற்றி அடைவேன் இல்லாவிடில் சுவர்க்கம் அடைவேன். இது சபதம்'' என்று உரத்துக் கூவினான் ஸ்ரீரங்கன்.

''ஹ ஹா!'' என்று சிரித்தார் தாமர்ல.

''வீண் பிரயாசை. அனுபவமில்லாமல் பேசாதே!'' என்றார் வேலூர் நாயகர்.

ஸ்ரீரங்கனின் கண்களில் தீ பிழிந்தது.

''அனுபவமா? எனக்கா இல்லை? மன்னரிடம் கேளுங்கள். வடக்கே பீஜப்பூர் மன்னருடன் இருமுறை மோதி இருக்கிறேன். அது போதாதா?'' என்று இரைந்து கேட்டான் அவன்.

வேங்கடராஜா அவனை ஆழ்ந்து பார்த்தார். பேசவில்லை.

ஸ்ரீரங்கனும் அவரை நேராகக் கண்ணில் பார்த்தான்.

அவன் கண் கலங்கியது.

மௌன மண்டியிட்டுக் கீழே தாழ்ந்தான்.

அவன் கண்களில் பளிங்கு போல் நீர் வார்த்தது.

''பெரியப்பா! தங்களை உறவு முறை சொல்லி இங்கே அழைத்ததற்குப் பொறுத்தருளுங்கள். என்மீது நம்பிக்கை இல்லையா? நான் தங்களுக்குத் துரோகம் செய்வேனா? நான் சாப்பிடுவது தங்கள் உப்பு. இதோ எனக்கு உத்தரவு கொடுங்கள். நான் சென்று வெற்றி அடைகிறேன். அல்லது வீர சுவர்க்கம் புகுகிறேன்'' என்றான்.

வேங்கடராஜா பேசவில்லை.

''இன்னும் நம்பிக்கை இல்லையா மகாராஜா! தங்கள் உறவினன் என்பதற்காக என் மீது அவநம்பிக்கை கொள்ள வேண்டுமா? இது நியாயமா? தருமமா? என்னை அனுப்புங்கள் மகாராஜா! போருக்கு அனுப்புங்கள்!''

என்று குழைந்தவாறு முன்னால் நகர்ந்து வந்தான் ஸ்ரீரங்கன்.

மன்னரை நெருங்கியதும் அவரது பாதங்களைப் பற்றிக்கொண்டான்.

கண்களின் பாஷ்பங்களை அவைகளில் வழிய விட்டான்.

''எழுந்திரு ஸ்ரீரங்கா!'' என்றார் வேங்கடவர்.

அவன் ஈரமுள்ள முகத்துடன் நிமிர்ந்தான்.

''நாளைக் காலை நீ போகிறாய். உனக்கு ஐந்நூறு பேர் படையும் கிடைக்கிறது. நீ செய்வதைச் செய்!'' என்றார் அவர்.

மதுரை நோக்கி உதவி கேட்கப் போயிருந்த அர்சுனன் செஞ்சி அடைந்ததும் ஜுரத்தில் விழுந்தான். விஷ ஜுரம் போல் தூக்கித் தூக்கிப் போட்டது. ஒரு வாரம் படுத்த படுக்கையாக இருந்தான்.

செஞ்சி அரசர் கிருஷ்ணப்ப நாயக்கர் அவனைக் கண்ணே போல் கவனித்துக் கொண்டார்.

அர்ச்சுனன் பொறுமை இல்லாமல் துடித்துக்கொண்டிருந்தான். ''ஐயோ! வேலூர் முற்றுகையில் இருக்கிறதே! நான் மதுரைக்கும் போக முடியாமல் இப்படி அகப்பட்டுக் கொண்டேனே! தக்க தருணத்தில்

**இவ்வார அட்டையை அலங்கரிப்பவர்:**
**குமாரி சுலக்ஷணா**



**வண்ணப்படம்: ஹரீஷ்**



# சின்னமுள்

## பெரியமுள்

டைரக்டர் ராஜ்பரத் காட்டில் இப்போது கொலையுதிர் காலம். மர்மப் படங்களைக் குத்தகைக்கு எடுத்துக் கொண்டிருக்கும் இவர் 3வது படத்தின் மூலமும் தன்னைக் கவனமாய் ஸ்திரப்படுத்திக் கொண்டுள்ளார்.

ஒரு ஜட்ஜின் பணக்கார மகன் தான் விரும்பிய பெண்ணைப் பலவந்தமாய் அடைய முயல்கையில் அவன் அல்பாயுஸாய் இறந்து போகிறான். கொலைக்கான தடயத்தை அழிக்க முயல்கையில் அடுக்கடுக்காய் எதிர்பாராக் கொலைகள் அவசியமாகிறது. படத்தின் கடைசி நிமிடம் வரை தருமத்தை சூது கவ்வுகிறது. இறுதியில் நீதி வெல்கிறது.

படத்தின் கதாநாயகன் — வில்லன் ராஜா. ஆறடி உயரத்தில் ஆர்ப்பாட்டமில்லாமல் தன் பணி முடிக்கும் ராஜா, உயிர்விடும் சுமங்கலியின் நடிப்பில் உயிர் இருக்கிறது. சுமங்கலியின் சிநேகிதியாய், குருட்டுப் பெண்ணாய் வந்து கடைசி வரை சிறப்பாகச் செய்பவர் சாந்தி (பன்னீர் புஷ்பங்கள்). கடைசிக் காட்சியில் வில்லனுடன் குருட்டாம்போக்கில் போராடி — அவன் அருகில் வரும்வரை காத்திருந்து கத்திரியால் குத்தி— உயிருக்காய் ஓடுவது மனதில் நிற்கிறது. பார்வையற்ற கண்கள் நடிக்கின்றன. இதே காட்சி ஒரு ஆங்கிலப் படத்தில் முன்பே பார்த்த நினைவு உறுத்தினாலும் இவர்களைத் திட்ட முடியவில்லை.

வில்லன் கொலைக்களத்துக்கு அடிக்கடி விஜயம் செய்வது பொருத்தமாய்ப் படவில்லை. உதிரிப் பூக்கள் அஞ்சு — வில்லனையே பிளாக்மெயில் செய்து ஒரு கலக்குக் கலக்குவது கலகலப்பான இடம்.

அதிசயமான முன்னேற்றம் காட்டும் சங்கர் கணேஷ். படத்தின் வித்தியாசமான அமைப்புக்கு முழுக் காரண கர்த்தாவான கேமிராமேன் திவாரி. அடுத்த படத்தில் நிறைய எதிர்பார்க்க வைக்கும் ராஜ்பரத். குத்தாத சின்ன முள் பெரிய முள்!

லாபம்: ஆங்கிலப் படம் பார்க்காதவர்களுக்கு மட்டுமே.

—நளினி சாஸ்திரி

உதவிகளோடு போகாவிட்டால் மூற்றுகை வெற்றி பெற்றுவிடுமே'' என்று புலம்பினான்.

மேலும் நான்கு தினங்கள் சென்றதும் ஒருவாறு ஜுரம் குறைந்ததும், ''சுவாமி! எனக்கு விடை கொடுங்கள்! நான் மதுரை போய்த் திரும்புகிறேன்'' என்று கிருஷ்ணப்பரிடம் கூறினான் அவன்.

கிருஷ்ணப்பர் அவனை ஆதுரத்துடன் பார்த்தார். ''அர்ச்சுனா! உன்னைப்போல் ராஜ பக்தி உள்ள பிள்ளைகள் நூறு பேர் இருந்தால் நம் சாம்ராஜ்யம் பிழைத்து விடும். இப்போது நீ தெற்கே போவது முறையல்ல. வழி சரியில்லை. மழை பெய்திருக்கிறது. இன்னும் பெய்கிறது என்று செய்திகள் சொல்லுகிறார்கள். இந்நிலையில் இந்த உடம்பில் நீ மதுரை சென்று திரும்புவதானால் இரண்டு மாதம் ஆகும். தவிர, மதுரை நாயக்கருக்கு சேதுபதியோடு இருக்கும் தகராறு முடிந்ததோ இல்லையோ தெரியாது. இந்த நிலையில் நீ அங்கே போய், உதவி வாங்கித் திரும்புவதற்குள் வேலூர் காத்துக் கொண்டிருக்குமா?'' என்று கேட்டார்.

அர்ச்சுனனுக்குத் தவிப்பாக இருந்தது. ''அப்படியானால் என்ன செய்ய சுவாமி?'' என்றான்.

''என் இரண்டாயிரம் படையைத் தருகிறேன். அழைத்துப் போ! அதற்கு மேல் இங்கே திரட்ட வழியில்லை. பணமில்லை. பொக்கிஷம் வெறுமை! எங்கும் பஞ்சம். இதை யெல்லாம் சடுகட்டும்படி உனக்கு ஒரு உபாயம் சொல்கிறேன்'' என்றார் அவர்.

''சொல்லுங்கள் சுவாமி!''

''பஞ்சமோ பட்டினியோ எதிலும் சிக்காமல் வடக்கே தப்பித்து இருப்பவர்கள் ஆங்கிலேயர்கள். தந்திரத்தில் வல்லவர்கள். சண்டையில் திறமையானவர்கள். அவர்கள் உதவியை நாடினால் என்ன?'' என்றார் அவர்.

''அவர்கள் வெறும் வியாபாரிகள். அவர்களிடம் ஏது பெரிய படை?'' என்றான் அர்ச்சுனன்.

''அப்படிச் சொல்லாதே. அவர்கள் நூறு பேர் இருந்தால் நமது ஆயிரத்துக்கு நிகரானவர்கள்! அவர்கள் போர்த் திறனைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர்கள் போர் முறையே வேறு. ஒழுங்காகவும் சீராகவும் சண்டை செய்வதில் கெட்டிக்காரர்கள் அவர்கள்தான்! நாட்டில் இப்போது இருக்கும் குழப்ப நிலையில் இப்படி சிங்காதனத்துக்காக, உறவும் உறவும் அடித்துக்கொள்ளும் வேளையில் இந்த வெள்ளைக்காரர்கள் நமக்குத் துணையாக இருந்தால் நிச்சயம் நமது லட்சியம் நிறைவேறும். நீ உடனே அவர்கள் உதவிக்கு ஏற்பாடு செய்தால் நமது தத்தளிப்புக்கள் சீக்கிரம் தீர வழி உண்டு. உடனே புறப்படு. மதுரை மன்னருக்கான ஓலையை நான் தூது மூலம் மதுரைக்கு அனுப்பி வைக்கிறேன். நீ அதற்குக் கவலைப்பட வேண்டாம்'' என்றார் அவர்.

அர்ச்சுனன் வடக்கு நோக்கிப் புறப்பட்டான்.

(தொடரும்)

வட்டமேஜை

# பெருந்தலைவரைப் போற்றுவோம்



● மகாத்மா காந்தி, ஜவாஹர்லால் நேரு ஆகியோர் ஏற்படுத்தித் தந்த மக்கள் பணி பாரம்பரியத்தைப் பிதுரார்ஜிதமாகப்பெற்று தொடர்ந்து செயலாற்றி வந்தவர் காமராஜ்.

காமராஜ் அறக் கட்டளைக்கு இரு லட்சியங்கள். (1) அந்தத் தேசத் தலைவருக்குப் புது தில்லியில் ஒரு சிலை நிறுவ வேண்டும். (2) அவரது பாராட்டையும் ஆதரவையும் பெற்ற இரு நிறுவனங்களுக்கு உதவ வேண்டும். அந்த இரு நிறுவனங்கள்: தில்லியில் உள்ள தமிழ்ப் பள்ளியும், சென்னையில் உள்ள பால மந்திரும்.

எளிய தொண்டனுகத் தொடங்கி இந்திய தேசியக் காங்கிரஸின் தலைவராகவும் மாநில முதல்வராகவும் உயர்ந்தவர் காமராஜ் என்பதை நோக்குமிடத்து அவர் நினைவைப் போற்றுவதுஎன்பது ஆட்சியிலும் கட்சியிலும் ஜனநாயக மரபுகளைப் போற்றுவதற்கு ஒப்பாகும்.

காமராஜ் நினைவு அறக் கட்டளைக்கு நன்கொடைவழங்கிப் பெருந்தலைவரின் நினைவைப் போற்றுமாறு வேண்டுகிறேன். நன்கொடைகளுக்கு வருமான வரி விலக்கு உண்டு.

டி.டி. வாசு,
அறங்காவலர்,
காமராஜ் நினைவு அறக்கட்டளை
3, கதிட்ரல் சாலை
சென்னை-86

● அட்டைப் படமும் நகைச் சுவையும் ரொம்ப ஜோர். நாகரிகம் என்ற பெயரில் ஆண்களின் உடையைப் பெண்கள் உடுத்தி உலாவி வரும் காட்சி உள்ளத்தை வேதனையுறச் செய்கிறது. இதற்கு எப்பொழுது விடிவு காலம் ஏற்படுமோ?

சென்னை-86 என்.ஜி. ராமன்

● ''நவநவராத்திரி'' என்ற தொகுப்பில் படத்துடன் வந்த பத்து துணுக்குகளின் கற்பனை அபாரம்! கொலு வைத்தவர்கள் வீட்டில் பெண்மணிகள் இத்துணுக்குகளைப் பேசி வரவேற்பு அளித்ததை உமாபதிக்குத் தெரிவியுங்கள்.

நாகப்பட்டினம் சங்கீத சிரோமணி ஏ. கல்யாணி

● World wide phenomenon தலையங்கம் பகுதி. அதற்குக் கீழ மிகப் பொருத்தமாகக் காதிலே 'பூ நாடக விமர்சனம் வெளியிட்டுள்ளீர்களே.' பலே ஆள் சார் நீங்கள்.

ஒண்டிபுதூர் சிந்தாமணி ஹக்கீம்

● துணிச்சலாக உண்மையை அப்பட்டமாக ஆணித்தரமாக, தாங்கள் தலையங்கத்தில் அழகாக எழுதியிருக்கிறீர்கள், கல்கி ஆசிரியர் World wide phenomenon ஆக இல்லாமல் கல்கியில் மட்டும் இருந்தாலும் வாசகர்களின் பாராட்டுக்கு உரியவர்.

நெல்லை ச. ஜெயகுமார்

● தலையங்கத்தைப் பலமுறை படித்ததில் நெட்டுரு ஆகிவிட்டது. கல்கி ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் அதே ஸ்டைல்: ஸடயர், விறுவிறுப்பு, வேகம், நகைச்சுவை—எல்லாமே தலையங்கத்தில் மிளிர்ந்தன. வாழ்க தங்கள் துணிவு.

திருச்சி தி.அ. சந்தானகோபாலன்

● வாரா வாரம் இந்திரா காந்தியையோ மத்திய அரசையோ இ. காங்கிரஸ் ஆட்சி செய்யும் மாநிலங்களையோ தாக்கி எழுதாவிட்டால் உங்களுக்குப்பொழுது போகாதா? அல்லது உங்கள் பத்திரிகை விற்பனை ஆகாதா?

தஞ்சை பாபு இராஜேந்திரன்

● உபசார வார்த்தைகளும், புகழுக்காக மட்டும் நடத்தப்படும் சமபந்தி போஜனங்களும் உண்மையான அன்பு, அக்கறை, அனுதாபம் இவைகளைக் காட்டாது என்று வெளிச்சம் போட்டுக் காட்டியது 'சமபந்தி' சிறுகதை. மனிதாபிமானத்தைச் செயலில் தான் காட்ட வேண்டும் என்றும் புரிய வைத்தது.

ஸ்ரீரங்கம் குமாரி சாந்தி ரெங்கராஜன்

● அண்ணாநகர் இந்தியன் வங்கியில் கொலு வைத்திருப்பதாகச் செய்தி படித்தேன். அடுத்து மார்கழி மாதம் கோலம் போட்டு சாணி பிடித்து பூ வைக்கலாம். தை மாதம் காவி அடித்துப் பொங்கல் படைத்துக் குலவை இடலாம்....

திருநெல்வேலி ப. தமிழ்மணி

● 'சிதம்பர ரகசியம்' ஏனைய ''திருத்தலம் கண்டேன் கட்டுரைகளிலிருந்து சற்றே வேறுபட்டு, நகைச்சுவையும், கருத்தாழமும் கொண்டதாய் விளங்குகிறது. தேன் சொட்டும் கட்டுரை எழுதிய தேனப்பனுக்கு எனது பாராட்டுக்கள்.

போடி முத்து. தங்க. ஐயப்பன்



# மறைக்குல மறவர் இருவர்

**பா**ரதி தம் குறுங்காப்பியத்தின் இரண்டு பாகங்களையும் ஐந்து சருக்கங்களாகப் பகுத்துத் தந்துள்ளார். அவை: (1) அழைப்புச் சருக்கம், (2) சூதாட்டச் சருக்கம், (3) அடிமைச் சருக்கம், (4) துகிலுரிதல் சருக்கம், (5) சபதச் சருக்கம். சருக்கங்களை அறிமுகப்படுத்துவதிலே ஒரு குறை காணப்படுகிறது. முதல் சருக்கத்திற்கு அழைப்புச் சருக்கம் எனப் பெயர் தந்துவிட்டு, அதன் முடிவிலே 'சூட்சிச் சருக்கம் முற்றிற்று' என்று பொறித்துள்ளார். உணர்ச்சி மேலீட்டால் ஏற்பட்ட கவனக் குறைவாக இருக்கலாம். ஆனால் அழைப்புச் சருக்கம் என்பதை விட சூட்சிச் சருக்கம் என்பதே பொருத்தமாக இருக்கும் என்று தோன்றுகிறது.

முதலில் பிரமத்தை வழிபட்ட பாரதி, அடுத்துக் காப்பியம் பாடும் திறனைத் தமக்கு அளிக்குமாறு கலைமகளை வணங்கி வரங் கேட்கின்றார். பிறகு காப்பிய மரபுப்படி நகர வருணனையும் பாடியுள்ளார். அத்தினபுரி வருணனையின் ஒரு பகுதி வருமாறு:

அத்தினபுரமுண்டாம் — இவ்
வவனியிலேயதற் கிணையிலையாம்;
பத்தியில் வீதிகளாம் — வெள்ளைப்
பனிவரை போற் பல மாளிகையாம்;
முத்தொளிர் மாடங்களாம் — எங்கு
மொய்த்தளி சூழ்மலர்ச் சோலைகளாம்;
நத்தியல் வாவிகளாம் — அங்கு
நாடு மிரதிநிகர் தேவிகளாம்;
அந்தணர் வீதிகளாம் — மறை
யாதிக ளாம்கலைச் சோதிகளாம்;
செந்தழல் 'வேள்வி களாம் — மிகச்
சீர்பெறும் சாத்திரக் கேள்விகளாம்;
மந்திர கீதங்களாம் — தர்க்க
வாதங்க ளாம்தவ நீதங்களாம்.''

இப்படியெல்லாம் அத்தினபுரத்தை வருணித்துக்கொண்டே செல்லும் பாரதியாருக்குத் தாம் வருணிப்பது கொடுங்கோலர் நகரைத்தான் என்பது இடையிலே நினைவுக்கு வந்துவிடுகிறது! அதன் பின் அவருடைய குரல் மாறித் தாம் கொண்ட கொள்கை வழி ஒலிக்கிறது. இதோ, பாரதியாரின் குரல் மாறிய வருணனை:

''சிந்தையி லறவளமுண்டாம் — எனிற்
சேர்ந்திடுங் கலிசெயு மறமுமுண்டாம்;
மெய்த்தவர் பலருண்டாம் — வெறும்
வேடங்கள் பூண்டவர் பலருமுண்டாம்;
உய்த்திடு சிவஞானங் — கனிந்
தோர்ந்திடு மேலவர் பலருண்டாம்;
பொய்த்தலைந் திரசாலம் — நிகர்
பூசையும் கிரியையும் புலைநடையும்
கைத்திடு பொய்ம் மொழியும் — கொண்டு
கண் மயக்காற் பிழைப்போர் பலராம்.''

அத்தினபுர வாசிகளிலே சிலருக்கு சிந்தையில் அறமுண்டாம்; ஆயினும் அதே நகரத்தில் கிருத யுகத்தைக் கலியுகமாக மாற்றுமளவுக்குக் கொடுமைகள் புரியும் மறமுமுண்டாம்!

சிந்தையில் அறமும், செயலில் மறமும் கொண்டவர்களுக்கு துரோணன், கிருபன் ஆகிய அந்தணர்களைப் பாரதி சான்று காட்டுகிறான். பாஞ்சாலி சபதத்திலே வரும் ஒரு வரிக்கு அவன் தந்துள்ள விளக்கம்:

''மறைக்குல மறவர்களிருவர் — வேதமோதும் குலத்திலே பிறந்தவராயினும் மறவர் தொழிலைக் கைக்கொண்ட துரோணன், கிருபன் என்னும் மஹான்கள்!''

மூல நூலாசிரியரான வியாச பெருமானே வீமனைக் கொண்டு துரோணரையே கேட்க வைக்கிறார். அதையும் பார்ப்போம்:

''கெட்டுப்போன பிராமணர்கள் தமக்குரிய தொழிலை விட்டு அரசர்களுடைய தொழிலில் புகுந்தபடியால் அல்லவோ அரசர்களுக்குக் கேடு வந்தது. அதர்ம வழியில் பிராமண குலத்தவர்கள் பிரவேசிக்காவிடில் அரசர்கள் மாண்டு போகாமல் தப்பி யிருப்பார்கள்.

''கொல்லா விரதமே மேலான அறம் என்றும், அந்த அறத்துக்குப் பிராமண குலமே வேர் என்றும் அறிந்த நீர், அந்தணர் குலத்தில் பிறந்திருந்தும் வெட்கமில்லாமல் கொலைத் தொழில் செய்து வருகிறீர்! ஏன் இவ்வாறு பாவத்தில் இறங்கினீர்?''

(ராஜாஜியின் ''வியாசர் விருந்து'' — பக்கம் 475)

இந்த விஷயத்திலே - அதாவது அந்தணர்களான துரோணரும், கிருபரும் ஆயுத மேந்திப் போர்க்களம் புகுந்தது அரசர் குலத்தின் அழிவுக்கே காரணமாகி விட்டதுஎன்பதிலே—வியாசரோடும் வில்லிபுத் தூராரோடும் பாரதிக்குக் கருத்து வேற்றுமை இல்லை.

ம.பொ.சி

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor : K. Rajendran

எவ்வகை உணவாயினும்
அதனை முழுமையாக்குவது
டி. எஸ். ஆர். ஊறுகாய்களே!

# புதிய
# கிடாரங்காய்
ஊறுகாய்








# டி.எஸ்.ஆர்

டி. எஸ். ஆர். & கோ
"கோகுல் கார்டன்ஸ்"
கும்பகோணம்

CRITERION

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

அம்மா உங்கள் கவனிப்பு கரை கடந்தது.

பார்லே

# கோமாளி விளையாட்டு குழந்தைக்கு காட்டிடும் குணக்குன்றே.

# நாடித் தேர்ந்தெடுத்தீர் அவளுக்கு நலமான பிஸ்கட்



தத்தி விளையாடும் முத்துப் பாப்பாவுடன் பொழுதெலாம் மகிழ்ந்திடும் உங்கள் இனிய கவனிப்பு எல்லையற்றதம்மா—அதை எடுத்துரைக்குமே அவளுக்காக நீங்கள் தேர்ந்தெடுக்கும் பார்லே க்ளூகோ—தீவிர சுகாதார முறையில் தயாரித்த பிஸ்கட்—சுவை மிக்கது கரகரப்பானது. அவளுடைய தேவைக்கு நிகரான ஊட்டச் சத்து உள்ளது. இந்தியாவில் அதி நவீன பிஸ்கட் தயாரிப்பாளர்களின் படைப்பு. உட்பொருள் தரம், சுவை, சுகாதார மான தயாரிப்பு, பேக்கிங் ஆகியவற்றிற்காக வரிசையாக 7 ஆண்டுகளில் 7 விருதுகளை வென்றது- ஆகவே, அதன் உன்னதம் உலகறிந்தது.




உலகத் தேர்வில் விருது வென்றது.

இந்தியாவில் உச்ச விற்பனை கண்ட பிஸ்கட்

பார்லே
க்ளூகோ

உங்கள் பாசத்தைப் பேசிடும் குழந்தை பராமரிப்பு பிஸ்கட்.

everest/81/PP/329-tm